# சமாதிலிங்கப் பிரதிட்டை விளக்கம்





தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

**சரசுவதி மகால் நூலகம்,**

தஞ்சாவூர்

தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீட்டு எண். 186

# சமாதிலிங்கப் பிரதிட்டை விளக்கம்

பதிப்பாசிரியர் :

புலவர். **வீ. சொக்கலிங்கம்,**

*தமிழ்ப் பண்டிதர், (ஓய்வு)*

சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர்.




**தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்**

**சரசுவதி மகால் நூலகம்,**

***தஞ்சாவூர்.***

2005] [ விலை : ரூ. 30-00

# நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு


| | |
|---|---|
| நூற்பெயர் | : சமாதிலிங்கப்பிரதிட்டை விளக்கம் |
| பதிப்பாசிரியர் | : புலவர். வீ. சொக்கலிங்கம் |
| வெளியிடுபவர் | : இயக்குநர், சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர். |
| வெளியீட்டு எண். | : 186 |
| மொழி | : தமிழ் |
| பதிப்பு | : இரண்டாம் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : செப்டம்பர், 2005 |
| தாள் | : TNPL 18.6 கி. கி |
| நூல் அளவு | : 21 x 14 செ. மீ. |
| பக்கங்கள் | : 92 |
| படிகள் | : 500 |
| எழுத்து | : 12 புள்ளி |
| அச்சிட்டோர் | : ஒளி அச்சுக்கோப்பு மற்றும் ஒளி அச்சு, சரசுவதி மகால் நூலகம். |
| புத்தகக்கட்டு | : மெலிந்த அட்டை |
| பொருள் | : சைவ ஆகமம். |
| விலை | : ரூ. 30-00 |

# வெளியீட்டாளர் முகவுரை

சரசுவதி மகால் நூலகத்தின் தமிழ்ச் சுவடிகள் பிரிவில் ஐம்பது செய்யுட்களுடன் திகழும் சமாதிலிங்கப் பிரதிட்டை விளக்கம் எனும் ஏட்டுச்சுவடியினை உரிய விளக்கங்களோடு இந்நூலில் பதிக்கப்பெற்றுள்ளது. சைவ சமயம் சார்ந்த யோகிகள், பெரியவர்கள், தவ வாழ்வு மேற்கொண்டவர்கள் ஆகியோர் சிவனடி சேர்ந்த பிறகு அவர்களுடைய பூத உடலை எரியூட்டாமல் சமாதி செய்து அவ்விடத்தில் இலிங்கப்பிரதிட்டை செய்து வழிபடுவது மரபாகும். அதுகுறித்த கிரியைகள் பற்றி இச்சுவடிநூல் தெளிவாக உரைக்கின்றது. சைவ ஆகமங்கள், சிவபுராணம், பத்மபுராணம், சிவதர்மோத்தரம், திருமூலர் திருமந்திரம், சிவஞான சித்தியார் எனும் நூல்களில் கூறப்பெற்றுள்ள கருத்துக்கள் இந்நூலுள் கூறப்பெற்றுள்ளன.

சரசுவதி மகால் நூலகத்தின் முன்னாள் தமிழ்ப்பண்டிதர் புலவர். வீ. சொக்கலிங்கம் அவர்கள் இதனைச் சிறப்பாகப் பதிப்பித்துள்ளார். அவரது பணி பாராட்டுக்குரியதாகும்.

இந்நூல் சிறப்பாக வெளிவரச் செயலாற்றிய சரசுவதி மகால் நூலக நிருவாக அலுவலர் திரு. இரா. சுப்பிரமணியன், வெளியீட்டு மேலாளர் முனைவர். குடவாயில் பாலசுப்ரமணியன் ஆகியோருக்கும், பதிப்புத்துறை பணியாளர்களுக்கும் என் பாராட்டுக்கள்.

இந்நூலினை அச்சிட நிதி உதவி நல்கிய நடுவண் அரசுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**மா. வீரசண்முகமணி**, இ. ஆ. ப.,
மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும்
இயக்குநர்,
சரசுவதி மகால் நூலகம்.

தஞ்சாவூர்
22-9-2005

# முன்னுரை

*“நானேயோ தவஞ் செய்தேன் சிவாயநம எனப்பெற்றேன்*
*தேனாயின் னமுதமுமாய்த் தித்திக்குஞ் சிவபெருமான்*
*தானேவந் தெனதுள்ளம் புகுந்தடியேற் கருள்செய்தான்*
*ஊனாரு முயிர்வாழ்க்கை ஒறுத்தன்றே வெறுத்திடவே !”.*

என்றார் மாணிக்கவாசகர். சிவபெருமான், உடல்களை ஆருயிர்கட்களித் தருளியுள்ளான். அவ்வுடல்களில், அவன்தானே வந்து, கோயில்கொண்டும் எழுந்தருளியுள்ளான். அவ்வாறு, எழுந்தருளியுள்ளதால், அவ்வுடல் அவ்விறைவன் பணிக்கு இடையூறாகத் தோன்றின். அதனை ஒறுத்தும், அத்திருப்பணிக்குப் பொருத்தமில்லாத உலகப்பொருள்கள் உளவேல். அவைகளை வெறுத்தும் வாழுமாறு பணித்துள்ளான்.

இவ்வாறு கூறியவதனால், எல்லா உடம்பினுக்குள்ளும் உத்தமன் கோயில் கொண்டுள்ளான் என்னும் தமிழாகமக் கூற்று உண்மையாகிறது.

இதனைச் சாதாரண மக்கள் அறிவதில்லை. ஞானிகள் அறிவர். அவர்கள், இறைவன் குடியிருக்கும் கோயில் இவ்வுடம்பு எனும் கொள்கையினை உடையவர்கள். அவ்வாறு இருப்பதனைத் தமிழாகமம் என்னும் திருமூலர் திருமந்திரம்.

“உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயமாம்
வள்ளல் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும் காளா மணிவிளக்கே !”

என்கிறது.

அவ்வாறு, தெள்ளத் தெளிந்தவர்கள், உள்ளத்தினுள்ளே சிவனை வழிபடுவர். அவ்வாறு வழிபட்டவர்கள், ஞானியர், யோகியர் முதலானோர். அவர்கள் சீவன் சிவனோடொன்றிய நிலையினை அடைவர்.

அவ்வாறு வாழ்ந்த, பற்றற்ற ஞானியர், தமது உடலைவிட்டு நீங்கினால், அவ்வுடலைச் சமாதியில் வைத்து அடக்கம் செய்து, அதன்மேல் சிவலிங்கம் அமைத்து வழிபடவேண்டும். அவ்வாறு செய்யும் விதிமுறைகளைக் கூறுவது இந்நூல்.

இதில், ஞானியர்தம் இலக்கணம் இதுவெனவும், அவர்கள் விட்டுச்சென்ற உடலைப் பால், தயிர், பஞ்சாமிர்தம் முதலானவற்றால் முழுக்காட்டித் தூய்மையான இடத்தில் சமாதிவைத்துக் கட்டிடம் எழுப்பி, அதன்மேல் பீடம் அமைக்கவேண்டும் எனவும் கூறும் அதுவரை செய்யுட்களாகக் கூறப்பட்டுள்ளன. குறைச்சுவடியாக உளதால், அப்பீடத்தின் மேல் இலிங்கம் அமைக்கும் முறை, அளவுகள் முதலியன காணப்படவில்லை.

சமாதிப்பீடத்தின்மேல் இலிங்கம் அமைத்து, அதனைச் சிவமாகக்கருதி, வழிபடல்வேண்டும். அவ்வாறு செய்யாமல் அவ்வுடலை வைத்துத் தீமூட்டினால், அந்நாட்டு அரசனுக்குக் கேடும், நாட்டில் பஞ்சமும், நோயும் வருவதோடு, அந்நாட்டிற்கு அழிவும் ஏற்படும்.

அவர்களது சமாதித்தலம், காசியைவிட மிகச்சிறந்தது. அவர்களையும், அவைகளையும் நிந்திக்கும் வீணர்கள், அருநரகடைவர் என்று இங்கு கூறப்பட்டுளது.

எமது மகால் சுவடி எண். 689-b/D 542-ல் மொத்தம் 50 செய்யுட்களே உள்ளன. சுவடி, செல்லரித்தும், சிதைந்தும், முறிந்தும் உள்ளது. சரிசெய்வதற்குப் பெரிதும் முயற்சி தேவைப்பட்டது. பல இடங்கள் தெளிவில்லை. பிழைகள் மலிந்துள்ளன. சொற்கள் விளக்கமாக இல்லை. முழுநூல் கிடைக்குமாயின், இலிங்கத்தின் அளவு, தன்மை முதலியன பெறப்படும். இதன் ஆசிரியர் பெயர் தெரியவில்லை.

மூலச்சுவடியில் உரையில்லை. சிவநெறியறியாச் சிறியேன், கானமயில் ஆடியதனைக்கண்ட முள்ளம்பன்றியும் தனது முட்களை விரித்தாடியதனைப் போல, வகுத்த உரையிலும் பதிப்பிலும் குற்றம் குறைகள் இருப்பின், அதனைக் குறிப்பிட்டுக்காட்டினால், திருத்திக்கொள்வதோடு, இனி அப்பிழைகள் நேராவண்ணம் காக்கவும் உதவும். மறுபதிப்பும் திருத்தம் பெறும். உதவியர்களுக்குப் புண்ணியமும் ஆம். அத்துடன் முழுச்சுவடி வைத்திருப்பார், அதனைத் தந்துதவுவார்களாயின், பெரிதும் நன்றிக் கடப்பாடுடையோம்.

இதன் உரையில் மேற்கோள் காட்டிய நூல்கள்:

| | |
|---|---|
| இலிங்கபுராணம் | திருநெறிவிளக்கம் |
| கம்பராமாயணம் | திருமந்திரம் |
| குறுந்திரட்டு | திருமாலை |
| ஞானக்கும்மி | திருவருட்பா |
| சிவஞானசித்தியார் | திருவாசகம் |
| சிவதருமோத்தரம் | நாச்சியார் திருமொழி |
| சிவவாக்கியம் | நாலடியார் |
| சீவகசிந்தாமணி | நாலாயிரத்திவ்வியபிரபந்தம் |
| சுந்தரர்-திருத்தொண்டத்தொகை | புறப்பொருள் |
| சொரூபானந்தசித்தியார் | பெருந்திரட்டு |
| தத்துவரத்னாகரம் | மஸ்தான் சாகிபு பாடல் 29 |
| தத்துவரத்னாவளி | மெய்ஞ்ஞான விளக்கம் |
| திருக்குறள் | வளையாபதி |
| திருக்கடைக்காப்பு | வள்ளல் ஞானசாரம் |
| திருஞானசம்பந்தர் | ஸ்ரீதத்துவநிதி |
| திருநாவுக்கரசர் தேவாரம் | ஆகியவை |

இந்நூலில், சமாதியின்மேல் இலிங்கம் அமைக்கும் முறை இல்லையாயினும், எமது மகால் பதிப்பான ஸ்ரீதத்துவநிதி 3-ம் பாகத்தில் இலிங்கங்களின் அளவுகள் முதலானவைகள் பொதுவாகக் கூறப்பட்டுள்ளன.

இந்நூலுக்கோர் இலக்கியமாக அமைந்த பரமானந்த யோகி சரிதம், நூலுரையில் சிறிதும் பிற்சேர்க்கையாக முழுவதும் சேர்க்கப்பட்டுளது. மராத்திய மன்னர்கள், அவர்தம் பரம்பரையினர், எரித்தலையே வழக்கமாகக் கொண்டுள்ளனர்.

கிறித்தவர்களும், முகம்மதியர்களும் எரிப்பதில்லை. சமாதியே வைக்கின்றனர். நம்மிடையே சமாதி வைப்பதும், எரிப்பதும் வழக்கமாக இருக்கின்றன. வீரசைவர்கள் எரிப்பதில்லை. சமாதியையே வைக்கின்றனர். சைவர்களில் தீக்கைபெற்றவர்கள், துறவிகள் முதலானோரைச் சமாதி வைத்தும், மற்றவர்களை எரித்தும் விடுகின்றனர். பொதுவாக 5-வயதுக்குட்பட்ட சிறுவர் சிறுமியர்களைப் புதைப்பதுதான் வழக்கம். மேற்கூறிய விதி வைணவர்கட்கும் உண்டு.

சமாதிலிங்கப் பிரதிட்டை செய்வது, சிறப்பாக, வீர சைவர்கட்கும், பொதுவாகச் சைவரில் ஒரு சாராருக்கும் உண்டு. சிலர், துளசிமாடம் அமைப்பதுண்டு. அரசமரம் நடுவதும் உண்டு.

திருவையாற்றில், தியாகப்பிரம்ம சமாதித்திருப்பணி நிகழ்வுற்ற காலை, துளசிமாடம், இடம்பெயர்க்க அகழ்ந்த போது, ஆங்கு பூமியினின்றும் வாசம் நிறைந்த புகை கிளம்பியதாகச் செய்தி. பின்னர், அதனை, முன்பிருந்தவாறே மூடி, வேறு ஒன்றும் செய்யாது விடுத்தனர் எனக்கேள்வி. அங்கு துளசி மாடங்கள், சமாதியின்மீது நிரம்ப இருப்பதைக் காணலாம்.

வேதாந்திகள், தங்கள் மடத்தலைவர்கள், துறவிகள் இயற்கை எய்தினால், அவர்களைச் சமாதிசெய்து, அதன்மேல் இலிங்கப்பிரதிட்டையினைச் செய்து வருகிறார்கள்.

எனவே சமாதியின்மேல், இலிங்கப்பிரதிட்டை செய்யும் கிரியை வீரசைவர்கட்கும், சைவர்கட்கும் வேறுபட்டாலும் இலிங்கம் அமைத்தல் ஒன்றாகவே உளது. எரிப்பவர்கள், இறந்தவர்கட்குக் கல்நட்டு வழிபடுகின்றனர். வீரசைவரும், சைவரும் இலிங்கம் அமைத்து வழிபடுகின்றனர்.

இது சைவசமய நூலேயாயினும், ஆங்காங்கு வீர சைவக் கருத்துக்கள் சிறிதளவில் காணப்படுகின்றன.

இதனை ஆய்ந்து உரையுடன் வெளியிட அனுமதித்த தஞ்சை சரசுவதி மகால் நிருவாகக்குழுவுக்கும், நன்முறையில் அச்சிட்டுத் தந்த, எமது சரசுவதி மகால் அச்சகத்தாருக்கும் எனது நன்றி உரித்தாகிறது. இந்நூல் வெளிவர உதவியாயிருந்த நடுவண் அரசை நன்றியோடு போற்றி மகிழ்கிறேன்.

இந்நூலைப் பெற்று, இதிலுள்ள குற்றம் நீக்கி, குணம்கொண்டு வாசித்துப் பயன்பெறுவோர் எல்லா நலனும் பெற்று வாழ, இறைவனை இறைஞ்சுகின்றேன்.

***"நமச்சிவாய வாழ்க நாதன்றாள் வாழ்க !***
***இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க !!"***

இங்ஙனம்,

தஞ்சாவூர்,
24-9-82.

புலவர். **வீ. சொக்கலிங்கம்,**
*தமிழாசிரியன்,*
சரசுவதி மகால் நூலகம்.

நமச்சிவாயன் திருவடி வாழ்க.

# சமாதிலிங்கப்பிரதிட்டை விளக்கம்

**காப்பு**

*வானப் பிள்ளை மதிச்சடை வார்கவுட்*
*டானப் பிள்ளை தனைநிக ராகிய*
*மோனப் பிள்ளை முருகன்முன் வந்தருள்*
*ஞானப் பிள்ளை பதாம்புய நாடுவாம்.*

*(திருவருள் துணைகொண்டு தொடங்கப்பெற்ற இச் "சமாதிலிங்கப் பிரதிட்டை விளக்கம்" என்னும் நூலுக்குக் காப்புச் செய்யுளாகப் பிள்ளையார் வணக்கம் கூறுகிறார்.)*

***உரை:*** விண்வீதியில் உலாவருகின்ற குழவியந் திங்களைத் தாங்கியுள்ள சடையினையும், மதநீர் வழிகின்ற கதுப்பினையுங்கொண்டு, தனது தந்தையாகிய சிவபெருமானுக்கு நிகராக மோனத்தை அருள்செய்கின்ற பிள்ளையாகவும், செந்தமிழ்க் கந்தவேளின் முன்தோன்றிய ஞான வடிவாகிய பிள்ளையாரின் பாதத் தாமரைகளை நாடி வணங்குவாம். (என்றவாறு)

***விளக்கம்:*** விநாயகர் தலையில் சந்திரன் உண்டு. தானம்-யானை மதம். யானைத் தலையையுடைய ஓங்கார வடிவினர் பிள்ளையார். கண்ணுதற் கடவுள் கல்லாலின் புடையமர்ந்து வல்லார்கள் நால்வருக்கும் மோனமூர்த்தியாக இருந்து மெய்ப்பொருளை அருளுபவன். அவ்வாறே கணபதியும் மோன உருவில் காட்சி தந்து அருளுபவன். முருகனுக்கு முன்னவன். அண்ணனாகத் தோன்றியது உலகியல்மேல் வைத்துக் கூறப்பட்டது. வழிபடுவாருக்கு ஞானத்தை அருளுபவன் எனினும் அமையும்.

## 1. நூற்பெயர் - பாயிரம்

*ஆதியருள் காமியமு மானரவ ரவமும்[1]*
*மணியார்சித் தியார்[2] விசுவ மாதியவா கமங்க*
*ளோதியநல் விதிகளுட னுயர்சைவ புராண*
*மொழுங்குடைய பான்மபுரா ணந்தருமோத் தரமோர்*
*தீதில்தரு மந்திரஞ்சீர் சிவஞான சித்தி*
*தெரித்தவிதி களுந்திரட்டிச் செய்விருத்தம் யாவு*
*மீதினிதெனச் சமாதிலிங்கப் பிரதிட்டை விளக்க*
*மென்றுரைப்பன் கற்றுவல்லோ ரின்னருளி னாலே!*

***உரை:*** எப்பொருட்கு மிறைவனாகிய சிவபெருமான் அருளிச்செய்த காமிகம், ரௌரவம், சிந்தியம், விசுவம் முதலான சைவ ஆகமங்களில் கூறப்பட்ட நல்ல கட்டளைகளுடன், உயர்ச்சிமிக்க சைவபுராணம், ஒழுங்கினையுடைய பதுமபுராணம், சிவதருமோத்தரம், நன்மைமிக்க திருமூலர், திருமந்திரம், சிறப்புமிக்க சிவஞானசித்தியார் முதலான ஞான நூல்களில் விதிக்கப்பட்ட கட்டளைகளையும் ஒன்று சேர்த்துச் செய்த இந்த விருத்தங்கள் யாவும் உளப்படுத்தி, கற்றுவல்ல பேரறிஞர்களின் திருவருளினாலே "சமாதிலிங்கப் பிரதிட்டை விளக்கம்" என்று பெயரிட்டுள்ளேன். (என்றவாறு)

***விளக்கம்:*** காமிகம்-காமியம் எனப்பட்டது. இது சிவபெருமானுக்குத் திருவடிகளாகும். ரௌரவம்: இது சிவபெருமானுக்குச் செவிகளாகும். சிந்தியம்: இது சிவபெருமானுக்குத் திருவடி விரல்களாகும். இவைகள், சிவாகமங்கள் இருபத்தெட்டினுள் அடங்கும். ஒவ்வொன்றும் ஒருகோடி கிரந்தங்கள் கொண்டன. விசுவம்-விசுவாகமம்: இது வாதுளாகமத்தின் உபாகமங்கள் பன்னிரண்டனுள் ஒன்று. இவற்றுள், காமிகமும் சிந்தியமும், கௌசிக இருடியின் பொருட்டுத் தோன்றின. ரௌரவம், கௌதம இருடியின் பொருட்டுத் தோன்றின. விசுவாகமத்தின் மூலாகமமான வாதுளாகமம் அகத்திய இருடியின் பொருட்டுத் தோன்றியது.

---

*1. மானரவாவவுமும என்றுளது. 2. சிந்தியார் என்றுளது.*

**சைவ ஆகமங்கள்**: இவை காமிகம் முதலாக இருபத்தெட்டு. இவை சிவபெருமானின் ஈசானம், தத்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம் முதலானவைகளி னின்றும் தோன்றின. இவை சரியை, கிரியை, யோக, ஞானங்களை விரித்துரைப்பன.

**சைவபுராணம்**: வாயுவினால் கூறப்பட்டதனால் இது வாயுபுராணம் எனவும் பெயர் பெற்றது. 24,000 கிரந்தங்கள் கொண்டதெனவும், 12,000 கிரந்தங்கள் கொண்டதெனவும் கூறுவர். சுவேதவராக கல்ப சம்பந்தமாகிய சிவமான்மியங் களை எடுத்துரைப்பது. இலிங்கம், காந்தம், கூர்மம், சைவம், பிரமாண்டம், பௌடிகம், மச்சியம், மார்க்கண்டேயம், வராகம், வாமனம் எனப் பத்தும் சிவனது மகிமையைக் கூறும் சிவபுராணங்களாம்.

**பத்மபுராணம்**: இது பதுமம், பாத்மம் என்றும் பேசப்படும். வடமொழி 55,000 கிரந்தங்களையுடையது. பிரம்மனது ஆயுட்காலத்தில் முற்பாதி பாத்துமகற்பம் எனப்படும். இதனை வராக கற்பமெனவும் கூறுவர். அப்பாத்ம கற்ப வரலாறு கூறும் நூல் பதும புராணமாகும்.

**சிவதருமோத்தரம்**: மறைஞானசம்பந்தர் அருளிச் செய்தது. இது 1. பரமதருமாதியில், 2. சிவஞான தானவியல், 3. ஐவகையாகமவியல், 4. பலவிசிட்ட காரணவியல், 5. சிவதருமவியல், 6. பாலவியல், 7. சுவர்க்க நரகவியல், 8. சனன மரணவியல், 9. சுவர்க்க நரக விசேடவியல், 10. சிவஞானயோகவியல், 11. பரிகாரவியல், 12. கோபுரவியல் எனப் பன்னிரண்டு இயல்களையுடையது.

சிவ தருமங்களை அகத்தியர் வினவ, குமாரக்கடவுள் கூறிய விடையாகும். இது சந்தான சருவோத்தமம் என்னும் சைவாகமத்தின் பிரிவாகும்.

**திருமந்திரம்**: சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள் இது பத்தாவதாகும். திருமூலர் அருளிய 3,000 பாடல்கள் கொண்டது. "தமிழ் மூவாயிரம்" எனப்பெயர்பெற்றது. சரியை

கிரியை யோக ஞானங்களை விரித்துரைப்பது. இது, ஒன்பது தந்திரங்களையும், 195 உள் தலைப்புக்களையும் கொண்டது. திருக்குறளைப் போல, கடவுள் வாழ்த்து வான்சிறப்பு, நீத்தார் பெருமை, அறன் வலியுறுத்தல் என நான்கு தலைப்புக்கள் சிறு மாற்றத்துடன் காணப்படுகின்றன. இதன் மேலும் மும்மூர்த்திகளின் முறைமை, வேதச்சிறப்பு, ஆகமச்சிறப்பு, அந்தணர் ஒழுக்கம், ஆகுதிவேட்டல், அரசாட்சிமுறை, அறஞ்செயான்திறம் என ஏழு தலைப்புகளையுடையது.

இவற்றுள், மும்மூர்த்திகளின் முறைமை கடவுள் வாழ்த்துளடங்கும். நீத்தார்பெருமை (அந்தணரொழுக்கம்)யில் வேதச்சிறப்பு, ஆகமச்சிறப்பு, ஆகுதிவேட்டல் என்ற மூன்றும் உள்ளன. அறன் வலியுறுத்த (அறஞ்செய்வான் திறம்)லில் அரசாட்சி முறை. அறஞ்செயான்திறம் அவையடக்கம் என்ற மூன்றும் காணப்படுகின்றன. ஒன்பது தந்திரங்களாகப் பகுக்கப்பட்டது. மற்றும் பல சிறப்புக்களைக்கொண்டது.

சிவஞானசித்தியார்: இது மெய்கண்ட சாத்திரம் பதினான்கனுள் விரிவானதும் மிகச்சிறந்ததுமான ஒரு சைவ சித்தாந்த சாத்திரம்.

> "பாரிலுள்ள நூலெல்லாம் பார்த்தறியச் சித்தியிலே
> ஓர்விருத்தப் பாதி போதும்"

என்று சிவபோக சாரம் கூறுகின்றது.

"தொகுசித்தி யாராறுந் - தண்டமிழின் மேலாந்தரம்" என்று உமாபதிசிவம் கூறுகின்றார். இவைபோன்ற பிறவற்றானும், இதன் பெருமை விளங்கும். இது, பரபக்கம், சுபக்கம் என இரு பிரிவினையுடையது. 12 சூத்திரங்களை யுடையது. இதற்கு, மறைஞான தேசிகர் சிவாக்கிரயோகிகள் ஞானப்பிரகாசமுனிவர், நிரம்பவழகிய தேசிகர். திராவிடமாபாடிய கர்த்தா முதலானோர் உரைகள் எழுதியுள்ளனர்.

மேற்கூறப்பட்ட நூல்களிலிருந்து, முனிவர்கள், யோகிகள் முதலானோரை அடக்கம் செய்யும் முறைமைகளை

எடுத்தத் தொகுத்து, விருத்தப்பாவினால் செய்து, 'சமாதிலிங்கப்பிரதிட்டை விளக்கம்' எனப் பெயரிட்டிருக்கிறார். இதனைக் 'கற்றுவல்லோரின் திருவருளினாலே செய்துள்ளேன்' என்றதனால் ஆசிரியரது தன்னடக்கமும் புலனாகின்றது.

## 2. நூல் - ஆன்மாக்கள்

பன்னரிய சாதிவிதி யெனும்பசுவிற் கறந்த
பரசமைய நெறியான பாலினிடைத் தோய்ந்த
தன்னனைய வுட்சமையத் தோதுமுறை யாகுந்
ததியதனிற் கடைந்தெடுத்த சைவநவ நீத
முன்னரிய சித்தாந்தி யுயர்ஞான சமாதிக்
குரைத்தசிவ லிங்கவிதி யுறுக்குநறு நெய்யாம்
அன்னதனை யடைத்தகுட மாகமத்தின் முடிகள்
அதிற்பொசியு நெய்சிறிதுண் சிற்றெரும்பான்
மாக்கள்

**உரை:** சொல்லுதற்கரிய சாதிவிதி எனும் பசுவில், கறந்தபால் பரசமயநெறி. அதில் தோய்ந்த தயிர் உட்சமயத்துள் ஓதுகின்ற முறையாகும். அத்தயிரினின்றும் கடைந்தெடுத்த வெண்ணெய் சைவமாகும். அவ்வெண்ணெய்யை உருக்கிய நறிய நெய், நினைத்தற்கரிய சித்தாந்தியினுடைய உயர்ந்த ஞான சமாதிக்கென்று விதிக்கப்பட்ட சிவலிங்க முறையாகும். அப்படிப்பட்ட நெய்யினைப் பெய்து வைத்த குடம் சிவாகமங்களின் முடிகளாகும். அக்குடத்தினின்றும் கசிகின்ற நெய்யினைச் சிறிதுண்ட எறும்புகளே ஆன்மாக்களாகும்.

**விளக்கம்:** பசு-சாதிவிதி, தயிர்-உட்சமயமுறை, பால்-பரசமயநெறி, வெண்ணெய்-சைவம், நெய்-சிவலிங்க விதி, நெய்க்குடம்-ஆகமத்தின் முடிவுகள், எறும்பு ஆன்மாக்கள்.

சிவஞான போதத் தொடக்கத்தில், மெய்கண்ட சாத்திரத்தின் திறம் கூறவந்த ஆசிரியர்;

"வேதம் பசுவதன்பால் மெய்யாகமநால்வ
ரோதுந் தமிழதனி னுள்ளுறுநெய்-போதமிகு
நெய்யி னுறசுவையா நீள்வெண்ணெய்
மெய்கண்டான்
செய்த தமிழ் நூலின் திறம்" என்று கூறுகின்றார்.

வேதம்-பசு, ஆகமங்கள்-பால், தேவார திருவாசகங்கள்-நெய், சிவஞானபோதம்-நெய்யின்சுவை எனப்பகர்கின்றது.

"மெள்ளனவே மொய்க்கும் நெய்க்குடந் தன்னை எறும்பெனவே" என்று, நெய்க்குடத்தினை எறும்பு மொய்த்தலைப்பற்றி மாணிக்கவாசகர் கூறுகின்றார். 'வள்ளல் ஞானசாரம்' ஆன்மாக்களைப் பற்றி;

சாற்றிய பரசி வன்றன் பராசத்தி தன்னின் முன்னே
தோற்றிய விச்சா ஞானத் தொழிலொரு மூன்றும் ஆன்மா
மாற்றரு மிச்சா ஞானக் கிரிகையை யெழுப்பு மன்னித்
தேற்றமி லிச்சா ஞானச் செய்தியுன் செய்தி யாமே!
(செய்-22) என்றும்,

"அறிவிக்க அறிகை யானும் அறியாம லிருத்த லானும்
அறிவித்த[1] வறியா மைக்கிங் கறிவுநீ யாத லானும்
அறிவித்த[2] வென்னை நீயிங் கருளெனத் தெருள லானும்
அறிவிக்க அறிவா னாய அறிவதான் மாவ தாகும்"
(செய்-85) என்றும்,

கூறுகின்றது.

### 3. திருவருள் தருதல் - வேறு

அனாதியி னுயிர்க ளம்மை
யாணவத் தெடுத்து நாதன்
மனாதிகட் கெட்டா வீட்டின்
வைத்தருள் வழங்க மாதோ

1, 2 அறிவிக்க எனல் பொருந்தும்.

வெனாதியி னியற்றும் பொல்லா
விருவினைக் கீடா[1] மாயச்[2]
சுனாதிமண் ணிறுவாய் வைத்தத்[3]
தொகுக்குநீண் டருளி னாலே !

**உரை:** பரம்பொருள், தனது பெருங்கருணைப் பேரருளினாலே, அனாதியாக இருக்கின்ற உயிர்களின் ஆணவத்தினை நீக்கி, மனவாக்குக் காயங்களுக்கெட்டாத சிவபாதத்தில் வைத்தருள் வழங்கவேண்டி, ஆன்மாக்களைப் படைத்தார். அவ்வான்மா பொல்லாத இருவினைகளுக்கு ஈடாக மாயந்தருகின்ற ஆகாயம் முதல் மண் இறுதியாகச் சேர்ந்ததை ஒக்கும் என்பதாம்.[4]

**விளக்கம்:** எல்லா உயிர்களும் இறைவனது திருவடியினின்றும் தொடங்கி, அவனது திருவடியிலேயே ஒடுங்கும் எனப்பகர்வர். "என்று நீ அன்று நான், உன்னடிமை யல்லவோ" என்பார் தாயுமானார். இதில் படைப்பு முறை கூறுகின்றார். சிவாத்துவதீபிகையிலே கூறப்பட்ட தோற்றக்கிரமம் வருமாறு:

*சிவதத்துவம் 36, சத்திதத்துவம் 35, சதாசிவதத்துவம் 34, ஈசுவர தத்துவம் 33, சுத்த வித்தியா தத்துவம் 32, மாயா தத்துவம் 31, கலாதத்துவம் 30, நியதிதத்துவம் 29, கால தத்துவம்28, வித்யா தத்துவம் 27, ராக தத்துவம் 26, புருட தத்துவம் (பிரகிருதி தத்துவம்) 25, குண தத்துவம் 24, புத்தி தத்துவம் 23, அகங்காரதத்துவம் 22, மனோதத்துவம் 21, ஞானேந்திரியம் 5, கன்மேந்திரியம் 5, தன்மாத்திரைகள் 5, பூதங்கள் 5 , இவை நான்கும் 20.*

**ஆணவம் என்பது மூலமலம். 'நான் பெரியவன்' என்று இருமாந்திருத்தல். சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்து வீடுபேறு; முத்தி.**

---

*1,2 சரியில்லை. 3. வைத்த தொக்கும் எனல் வேண்டும். 4. இதில் பின் இரண்டடிகள் தெளிவில்லாததால் பொருள் விளங்கவில்லை.*

இருவினை என்றது நல்வினை, தீவினை, உயிர்கள் உடம்பெடுத்துச் செய்கின்ற வினைப்பயனை, மீண்டும் அவ்வுயிர்கள் எய்தும்,

"இருவினை மாமரம் வேர்பறித் தெழுந்து"
*(திருவண்டப்பகுதி-87)* என்றும்

"முந்தை வினைமுழுதும் ஓய உரைப்பன் யான்"
*(சிவபுராணம்-20)* என்றும் வாதவூரடிகள் கூறுவார்.

"பல்லாவுள் உய்த்து விடினும் குழக்கன்று
வல்லதாம் தாய்நாடிக் கோடலை-தொல்லைப்
பழவினையும் அன்ன தகைத்தேதற் செய்த
கிழவனை நாடிக் கொளற்கு" -நாலடியார்-101

"அல்லித்தா ளற்ற போது மறாதநூ லதனைப் போல
தொல்லைத்தம் முடம்பு நீங்கத் தீவினை தொடர்ந்து நீங்காப்
புல்லிக்கொண் டுயிரைச் சூழ்ந்து புக்குழிப் புக்குப்பின்னிற்
றெல்லையி றுன்ப வெந்தீச் சுட்டெரித் திடுங்க ளன்றே."
-சீவகசிந்தாமணி-2876

"மற்றுந் தொடர்பா னெவன்கொல் பிறப்பறுக்கு
லுற்றார்க் குடம்பு மிகையவை யுள்வழிப்
பற்றா வினையாய்ப் பலபல யோனிக
ளற்றா யுழலு மறுதற் கரிதே" -வளையாபதி-42

மேலும், ஆகாயம் வாயிலாகி மற்றைப் பூதங்கட்கிடங் கொடுக்கும். வாயு, கலித்து, மற்றைப் பூதங்களைத் திரட்டும். தேயு, சுட்டு ஒன்றுவிக்கும். அப்பு, குளிர்ந்து பதஞ்செய்யும். பிருதிவி, வன்மையாகிய மற்றெல்லாவற்றையும் தாங்கும். ஆகாயம், வட்ட உருவினது. வாயு, அறுகோணம், தேயு, முக்கோணம், அப்பு, பிறை வடிவினது, பிருதிவி, சதுரம்.

வள்ளல் ஞானசாரம் பின்வருமாறு கூறுகின்றது:-

"ஆணவஞ் சிறிதே நீக்கி யருங்கலை கிரிகை யாக்கும்
பேணிய வித்தை ஞானம் பெருக்கிடு மராக மிச்சை
நீணுதல் பண்ணும் பஞ்ச விடயமா நிலைமை தோறும்
காணுதல் முந்தி நிற்றல் கருதிடில் புருடனாமே!" (20)

## 4. சிவசக்தி முதலானோர் தோற்றம்

*பரந்தரு சிவமே சத்தி பகர்நா தம் விந்து வைந்தாம்
வரந்தரு முகன்ம கேசன் மன்னுசீ ருருத்தி ரன்றான்
றிரந்தரு முலகங் காக்குந் திருமறு மார்பன் வேத
னுரந்தரு மொன்றி னொன்றா யுதையம
தாவ ரன்றே!*

***உரை:*** வீடு பேற்றைத் தருகின்ற சிவமே, சக்தி எனப்பட்டது. சொல்லப்படுகின்ற நாதம், விந்து முதலானவை ஐந்து பிரணவங்களாம். அவற்றினின்றும் மகேசன் தோன்றி, மகேசனின்றும் உருத்திரன் தோன்றி, உருத்திரனின்றும் திருமால் தோன்றி, திருமாலினின்றும் பிரம்மா தோன்றினார், என்க[1].

***விளக்கம்:*** பிரபஞ்சம் அனைத்தும், சடமும் சித்துமாகிய இருகூறில் அடங்கும். சடம், சிவமாம். சித்து, சத்தியாம். சித்தின்றி சடம் இயங்காது. அதாவது, சக்தியின்றிச் சிவம் இயங்காது. எனவே, தோற்றம், நிலைபேறு, அழிவு ஆகிய மூன்றாக அவ்வியக்கம் தோன்றும். தோற்றுவிக்கும் சக்தி, பிரம்மா எனப்பட்டது. நிலைபேறு செய்து காக்கின்ற சக்தி, திருமால் (விஷ்ணு) எனப்பட்டது. அழிக்கும் சக்தி, உருத்திரன் எனப்பட்டது. ஒவ்வோரணுவையும் இம்மூன்று சக்திகளும் பற்றி நின்று, தத்தம் முறையிலே, தமது தொழில்களைச் செய்யும். முன்கூறிய தோற்றுவித்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழிலோடு மறைத்தல், அருளுதலும் ஆகிய இரண்டும் சேர்ந்து ஐந்தொழிலாயிற்று. இத்தொழில்களைப் புரிபவர்கள் முறையே பிரமன், திருமால், உருத்திரன், மகேச்சுரன், சதாசிவன் ஆவர்.

---

1. இச்செய்யுளும் தெளிவில்லை.

மணிவாசகப்பெருமான் திருவாய் மலர்ந்தருளிய
திருவாசகத்துள்:

"போற்றி அருளுகநின் ஆதியாம் பாதமலர்
போற்றி அருளுகநின் அந்தமாம் செந்தளிர்கள்
போற்றிஎல் லாவுயிர்க்குந் தோற்றமாம் பொற்பாதம்
போற்றியெல் லாவுயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள்
போற்றியெல் லாவுயிர்க்கும் ஈறாம் இணையடிகள்
போற்றிமால் நான்முகனும் காணாத புண்டரிகம்
போற்றியாம் உய்யஆட் கொண்டருளும் பொன்மலர்கள்
போற்றியாம் மார்கழிநீர் ஆடேலோர் எம்பாவாய்"

என்னும் திருவெம்பாவை 20-ஆம் செய்யுள் இவ்வைந்து தொழில்களின் உண்மையை விளக்கும். மற்றும், திருநெறிவிளக்கம்: "செங்கமலத் தயன் படைக்கும் உலகம் எல்லாம்" எனத்தொடங்கும் 21-ஆம் செய்யுளும், "ஓங்குபரா பரன்றுள்ளற் குடிலையிலே நாதமுள" எனத்தொடங்கும் 27-ஆம் பாடலும் இதுபற்றிக் கூறும்.

## 5. 84 நூறாயிரம் யோனி பேதங்களை மானுடத்திலேற்றுதல்

தோற்றிய பிரமன் றன்பாற் றோற்றிடுந் தோற்ற நான்குஞ்
சாற்றுமத் தோற்ற நான்கிற் சனித்திடுஞ் சனன மேழி
லாற்றுமெண் பத்து நானூ றாயிரம் யோனி யாங்கு
போற்றுமா னுடத்தி லேற்றும் புண்ணிய நண்ணற் பாற்றோ!

**உரை:** அவ்வாறு தோன்றிய பிரம்மனது நான்கு முகங்களினின்றும், நான்கு தோற்றங்கள் தோன்றும். அவ்வாறான நான்கு தோற்றத்தும் எழுவகைப் பிறப்புக்கள் தோன்றிடும். அவற்றினின்றும் 84 நூறாயிரம் யோனி பேதங்கள் தோன்றும். அவற்றில், மானுடன் திறம், போற்றற்குரிய புண்ணியமுடைத்தாம். அதனை அடைவது அருமையாகும்.

**விளக்கம்:** பிறப்பு எழுவகையாம். அவை தாவரம், நீர்வாழ்வன. ஊர்வன, பறப்பன, விலங்கு, மக்கள், தேவர்

என்பனவாம். இவற்றின் யோனி பேதங்கள் 84 நூறாயிரம்,அவை: தேவர் 14 நூறாயிரம், மக்கள் 9 நூறாயிரம், விலங்கு 10 நூறாயிரம், பறவை 10 நூறாயிரம், ஊர்வன 11 நூறாயிரம், நீர்வாழ்வன 10 நூறாயிரம், தாவரம் 20 நூறாயிரம், ஆக 84 நூறாயிரமாம். இவற்றுள் தேவர் 16 நூறாயிரமென்றும், தாவரம் 18 நூறாயிரம் என்றும் கூறுவாரும் உளர். எனினும் இருசாராருடைய கூட்டுத்தொகையும் 84 நூறாயிரமாகவே உளது.

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தே னெம்பெருமான்"

என்பார் மாணிக்கவாசகனார்.

"எழுமை எழுபிறப்பு முள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவர் நட்பு" -குறள் 107

"எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்" -குறள் 62

ஈண்டு முன்கூறிய வளையாபதி 42-ஆம் செய்யுளும் அமையும்.

## 6. வானவரை விட மனிதர் மேம்பட்டவர்

வானவ ரதிக ரேனு மண்ணிடை யிழிந்து நல்ல
தானமத தடைந்து நம்பன் றனையருச் சித்து வேண்டு
மீனமில் பதங்க ளாதி யெய்தியின் புறுவ ரென்றால்
ஆனமா னுடத்து திக்கு மவர்களே யதிக ரன்றோ!

***உரை:*** தேவர்கள் என்பார் விண்ணுலகத்திலிருந்து, வானவர் எனப்பெயர் பெற்றும், அதிக வல்லமை

முதலானவைகள் உள்ளவரேனும், குற்றமற்ற நல்ல பதவி முதலானவைகளை வேண்டி, மண்ணுலகடைந்து, சிறந்த சிவத்தலத்தில் தங்கிச் சிவபரம்பொருளை வழிபட்டுப் பலன் பெறுகின்றனர் என்றால், மண்ணுலகிலேயே பிறந்த மானிடர்கள், அவர்களைவிடச் சிறந்தவர்கள் அல்லவா!

*விளக்கம்:* வாகீசமுனிவர், ஆலாலசுந்தரர் முதலானோர் மண்ணுலகம் போந்து முறையே திருநாவுக்கரசராகவும், சுந்தரமூர்த்தி நாயனாராகவும் மற்றையோராகவும் பேறு பெற்றனர். உமாதேவியார்கூட மண்ணுலகம் வந்து காமாட்சியாகச் சிவனைப் பூசித்துப் பேறுபெற்றதை யாவரும் அறிவர்.

"குனித்த புருவமும் கொவ்வைச்செவ் வாயில்
குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல்மேனியில்பால்வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்தபொற் பாதமும் காணப்பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவ தேயிந்த மாநிலத்தே!"

என்று அப்பரடிகளும்,

"புவனியிற் போய்ப்பிற வாமையில் நாள்நாம் போக்குகின்றோம் அவமே" என்று மணிவாசகனாரும் கூறியுள்ளனர்.

"மண்ணுலகிலுள்ள திருவரங்கமே வேண்டும்; விண்ணுலக இந்திரலோகம் வேண்டேன்" என்கிறார் தொண்டரடிப் பொடியாழ்வார்.

"பச்சைமா மலைபோல் மேனி பவளவாய் கமலச் செங்கண்
அச்சுதா அமர ரேறே ஆயர்தம் கொழுந்தே என்னும்
இச்சுவை தவிர யான்போய் இந்திர லோகம் ஆளும்
அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமா நகருளானே!"
-திருமாலை 2

## 7. அனுலோமன்

மைந்துறு மறைநூல் சொன்ன விதிமுறை வதுவை செய்தே
யந்தண ராதி மூவ ரரசனை யாதி யானோர்
தந்தநற் கன்னி மாரைத் தத்தம திழிடைக் கூட
முந்திடு மனுலோ[1] மங்கண் மூன்றிரண் டெ(ான்றத)ாமே[2]!

**உரை:** அழகுமிக்க வேதநூல்கள் குறிப்பிட்ட விதிமுறைகளின்படியே திருமணம் செய்து, அந்தணர், அரசர், வணிகர் ஆகிய மூவருக்கும், அரசன், வணிகன், வேளாளன் ஆகிய மூவரும், தங்கள் தங்கள் கன்னியரைத் தந்ததால், தமது இழிவினைக்கூடக் கருதாமல், அந்தணரால் மூவகையும், அரசரால் இருவகையும், வணிகரால் ஒரு வகையுமாக அனுலோமன்கள். தோன்றினர்.

**விளக்கம்:** அனுலோமன்-நாற்குலத்துள்ளும் உயர்குலத் தந்தைக்கும் இழிகுலத் தாய்க்கும் பிறந்த பிள்ளை. அந்தணர் மற்ற மூன்று குலத்தோடு மூவகையாகவும், அரசர் மற்ற இரண்டு குலத்தோடு இருவகையாகவும், வணிகர், வேளாண் குலத்தோடு ஒருவகையாகவும் ஆக ஆறுவகையில் அனுலோமன்கள். (உயர்குலத்தோர் நால்வர்: ஆகப் பதின்மர்.)

## 8. சைவ சமயஞ்சார்வோர்

இத்தகைய பதின்மர் தம்மி லிறைவன தருளி னாலே
தத்தம தொழுக்க[3] முற்றிச் சைவநற் சமையஞ் சார்வோர்
வித்தக வாசான் றன்னாற் சமையாதி யடைவின் மேவி
யுத்தம ச(மைவி) யாதி யொருநால்வ ராவ ரன்றே!

**உரை:** இவ்வாறு மேற்சொல்லப்பட்ட பத்துவகைக் குலத்தவருள், இறையருளாற்றத் தமது நல்லொழுக்க

---

1. நாற்குலத்துள் உயர்குலத்து ஆணுக்கும் இழிகுலப் பெண்ணுக்கும் பிறந்த பிள்ளை அனுலோமன். 2. எழுத்துக்கள் சரியில்லை. 3: கொழுக்க என்றுளது.

மிகுதியினாலே, சைவ சமயத்தைச் சார்ந்தவர்கள்; சிறப்புமிக்க நல் ஆசிரியராலே, சமைய தீக்கை முதலானவை பெற்று, அதன்படி ஒழுகிடும். உத்தமமான சைவ சமயநிலைகள் கொண்டவர்கள் நால்வராவர்.

***விளக்கம்:*** பரம்பரைச் சைவர்களும், சைவமதத்தைச் சார்ந்தவர்களும், நல்லாசிரியரை (குருவினை) அடைந்து, சமையதீக்கை முதலான பெற்று, அதன்படி ஒழுகிவருதல் வேண்டும். அவ்வாறு ஒழுகுபவர்கள், சரியை, கிரியை, யோக, ஞானம் எனப்பட்ட நால்வகையினர் எனப்பிரித்தற்குரியவர். இவை ஒவ்வொன்றும் நன்னான்காகப் பிரிந்து 16 வகையினராகக் கருதப்படுவர். இவர்கள், அகப்பூசை, புறப்பூசை, மந்திரசெபம், திருக்கோயில் வழிபாடு, அடியார் வழிபாடு, பிறர் துன்பம் துடைத்தல் ஆகிய இறைபணி நிற்றலில் ஒழுகுவர். இவ்வழிகளில் இருவினை ஒப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம் என்பன சிறந்த மரபுகள்.

இனிச் சைவம், அகச்சைவம், அகப்புறச்சைவம் என இருவகைப்படும். அகச்சைவம்: பாடாண வாதசைவம், பேதவாத சைவம், சிவசமயவாதசைவம், சிவசங்கிராந்த வாத சைவம், ஈசுர அவிகாரவாத சைவம், சிவாத்துவித சைவம் எனப்படும். அகப்புறச்சைவம்; பாசுபதம், மாவிரதம், காபாலம், வாமம், வயிரவம், ஐக்கியவாதம் என்பவைகளே யன்றி, காளாமுகம், சாம்பவம் என்பனவும் ஆம். இவை அகச்சமயம், அகப்புறச்சமயம் எனவும் பேசப்படும். சைவசாதனங்கள்-சரியை முதலாயின.

இவையேயன்றி, உருத்திரசைவம், வீரசைவம், சம்மேளசைவம், மார்க்க சைவம், பௌராணிக சைவம், அசுத்த சைவம், கடும் சுத்தசைவம், சுத்த சைவம், கௌமாரம், காணாபத்தியம், சாக்தம், சௌரம் முதலானவைகளும் உண்டு. நால்வகைச் சைவம்: சுத்தசைவம், அசுத்த சைவம், மார்க்க சைவம், கடுஞ்சுத்த சைவம் என்பார் திருமூலர்-*1394.*

'சமைவி' என்னும் இடம் சுவடியில் சிதைந் துள்ளது. படியெடுத்த பிரதியில் 'சமைவி' என்றுளது. விளங்கவில்லை.

## 9. சைவ சந்நியாசி - வேறு

ஆனபுகழ்ச் சாலோக மாதியடை விக்கு
மருஞ்சரியா பாதமுத லடைவுதனிற் புரிவர்
ஞானமுதல் போதகஞ்செய் நல்லதிகா ரத்தி
னண்ணினரேல் வெறுப்புடைய[1] நற்குரவ ரருளால்
ஈனமிலாச் சைவசந்நி யாசமுறை யடைந்தங்
கினிதுசரி யாநிற்பர் பந்தகுர வன்பால்
வானமதிக் குடைகவரி பல்லக்கு வரிசை
மணிமகுட மியானைமுத லிலாஞ்சனமும் வைத்தே!

**உரை:** புகழான சாலோகமாதிய அடைவிப்பதனை, அரிய சரியாபாதம் முதலானவற்றில் ஒழுகுபவர்கள் பெறுவர். ஞானம் முதலானவற்றைப் பிறருக்குபதேசிக்கும் பேறு பெற்றோர்களேல்; சடைமுடிதரித்த நல்ல குருவினிடம் சந்திர வட்டக்குடை, கவரி, பல்லக்கு, வரிசைகள், மணிமகுடம், யானை, அவர்தம் முத்திரை முதலானவைகளையும் வைத்து குற்றமற்ற சந்நியாசம் பெற்று, அவ்வழியில் நேர்மையுடன் நிற்பர்.

**விளக்கம்:** நால்வகைச் சைவமாகிய சுத்தசைவம், அசுத்த சைவம், மார்க்க சைவம், கடுஞ்சுத்த சைவம் ஆகியவை, சரியை, கிரியை, யோக, ஞானம் என்ற நான்கையுஞ் சார்த்து பொருந்தும், சைவராவார் மாவிரதியர், பாசுபதர், காளாமுகர், வாமர், பைரவர் எனவும் பேசப்படுவர். இவற்றைச் சைவம் உள்ளிட்ட அறுசமயம் என்பர் ஒரு சாரார். 34 வகையின் சமயம் பேசப்படும். மேலும் பல சமயங்கள் கூறப்படுகின்றன.

சைவ சந்நியாசியாவார், எல்லோராலும் தொழத்தகும் இயல்புடையவராயிருத்தல் வேண்டும்.

"தாடி வளர்த்துச் சடைவளர்த்து-நல்ல
சந்நியாசி என்றொரு வேடமிட்டு

---

1 = ?

ஓடித் திரிகின்ற விளையாட்டை - இங்கே
ஒப்புவ தாரடி ஞானப்பெண்ணே!"

-ஞானக்கும்மி 114

உண்மைத்துறவிகள் பேரறிவாளர்களாயிருப்பர்.

"எதிகள், யாரினும் பெரியரா வியம்புமா மறைகள்
அதிவன் னாச்சிர மத்தவர் தங்களை யவ்ரி
லதிக ராமவ ரொருவரு மில்லையீங் கிவரே
துதிசெ யாச்சுரர் நரர்கள்யா வருந்தொழப் பாடுவார்"
என்றும்,

"தோன்றுமெய்ப் பொருளும் பொய்ம்மையே போதச்
சொரூபமெய் யெனவனு பவத்திற்
றோன்றுமேன் ஞானி யவனிலுத் தமன்சிற்
சொரூபமே யாகவெப் பொருளுந்
தோன்றுமேற் றேற்றந் தோற்றமில் லாமை
தோன்றிடா வின்பமாஞ் சொரூபத்
தோன்றலை யானென் றுரைக்குமாஞ் சுருதிப்
பொருளெனச் சொல்லுவரன்றே!"

என்றும் குறுந்திரட்டு கூறுகின்றது. உண்மைச் சந்நியாசி எவரென அறிந்து, அவர்பாற் பற்றுக்கொண்டு பணிவிடை புரிந்து, குருதட்சிணை தந்து, சந்நியாசம் பெற்று, அவ்வழி ஒழுகுதல் உண்மைச் சந்நியாசமாம். அப்படிப்பட்ட சந்நியாசம் பெற்றவர்கள், ஆன்மாக்கள் உய்யும்பொருட்டு மக்களை நல்வழிப்படுத்தும் உபதேசங்களைக் கூறி, நல்லொழுக்கப்படுத்தி இன்புறுவர்.

## 10. நான்கு யுகத்தும் எதித்திறங்கள்[1]

பூசுரர்[2]பா லெதித்திறங்க ணாலுகத்து மாகும்
பூபதி[3] மேற் றிரேதாதி மூன்றுகத்தும் புகுமால்
மாசுதவி ரெதித்திறங்கள் வணிகேச னிடத்து
மன்னுதுவா பரயுகத்துங் கலியுகத்தும் வாய்க்கு

---

1. யதி-முனிவர்(அ) துறவி, 2. அந்தணர், 3. அரசர்

மேசுதல்சேர் கலியுகத்திற் சதிரர்க்கு[1] நல்ல
வெதித்திறங்கள் பெற்றிடுத லியல்பாகு மென்றே
யாசுதவிர் தருமாதி நால்வகையு முரைப்போ
னருளியவா கமங்களெல்லா மறைந்திடுமென்
றறியே!

*உரை:* அந்தணர்களுடைய சந்நியாச முறைமைகள் கிரேதா, திரேதா, துவாபரம், கலி ஆகிய நால்யுகத்தும் சிறப்பெய்தும். அரசர்களுடைய சந்நியாச முறைகள், திரேதாயுகம் முதலாக மூன்று யுகத்தும் சிறப்புடையன. வணிகர்களுடைய சந்நியாச முறைகள், துவாபரம் முதலான இரண்டு யுகத்தும் சிறப்புப்பெறும். வேளாளர்களுடைய சந்நியாச முறைகள், கலியுகத்துச் சிறப்படையும். இவைகள் போற்றப்பெறும். இவற்றைக் குற்றமற்ற அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கு வகையினையும் உரைக்கின்றவனாகிய இறைவன் அருளிய ஆகமங்கள் கூறுகின்றன என்பதை அறிந்துகொள்வாயாக.

**விளக்கம்:** எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகுகின்றவர்களாகிய அந்தணர்களுடைய துறவுநிலை எக்காலத்தும் போற்றற்குரியது. முறைசெய்து காப்பாற்றும் மன்னவனுடைய துறவு, பின் மூன்று யுகத்திலும் சிறந்து விளங்கும் தன்மையுடையது. பிறர் பொருளையும் தம் பொருள்போலப் பேணி, நன்றாய் வாணிகம் செய்கின்ற வணிகர்களுடைய துறவு, துவாபரம், கலி ஆகிய இரு யுகத்தும் சிறந்து விளங்கும் தன்மையுடைத்து. உலகத்தாராகிய தேர்க்கு, அச்சாணி போன்று விளங்கும் வேளாண்மையினைச் செய்கின்ற வேளாளர்களது துறவு, கலியுகத்தில் போற்றத்தகும் சிறப்புடையதாகும். எனவே கலியுகத்தில் நான்கு வருணத்தாருடைய துறவும் சிறப்புடையது எனப்பெற்றாம்.

---

[1]. வேளாளர்.

## 11. துறவிகள்

தன்னருளா லவிடேகந் தாங்கிமுனந் தவறித்
தனையடைந்த போதகனுந் தானொழிந்த குரவ
ரின்னருளா லவிடேக மெய்தினரும் வெறுத்தங்
கினிதடைந்தா லக்குரவ னிரங்கியருள் கூர்ந்து
பின்னருளாற் சமையாகி யவிடேகம் புரியப்
பெறற்கரிய வெதித்திறமா மவிடேகம் பெறுவர்
துன்னருளாற் வனத்துறையும் தபிவிதுடன் வித்துவன்
துலங்குமுப்பேர் பெறுவரிவர் சரித்திரமேற்
சொல்வாம் !

***உரை:*** தானே துறவினை மேற்கொண்டு, அது ஆற்றாது தவறிய சமயாசாரியனும், தானெனும் அகந்தையொழித்த நல்லாசிரியருடைய தீக்கை பெற்றோரும், வாழ்க்கையில் வெறுப்படைந்தோரும் சற்குருவையடைந்தால், அவர், மனமிரங்கி, சமையதீக்கை முதலாக நிருவாண தீக்கை வரையிலான அபிடேகத்தினை அருள்வர்: அதனால் பெரிய துறவுநிலையினைப் பெறுவர். அதனால் தபோவனங்களிலே வாழ்கின்ற தவத்தோன் எனப்படும் 'தபி' என்ற பெயரும், கற்றவன் (ஞானி) எனப்படும் 'விதுடன்' என்ற பெயரும், அறிஞன் எனப்படும் 'வித்துவான்' என்ற பெயரும் ஆகிய மூன்று பெயரினையும் எய்துவர். இவர்களது வரலாற்றினை அடுத்து விரித்துரைக்கின்றேன்.

***விளக்கம்:*** இல்லறத்தில் வெறுப்புற்றுத்தானே காவியுடுத்து, சந்நியாசம் மேற்கொள்வர். அவர்களில் ஒரு சாரார் புலனடக்கமின்மையால் தவறிழைப்பர். இளம் வயதில் (பிரம்மச்சரியத்திலே) துறவு மேற்கொண்டவர்களில் ஒருசிலர், புலன்வழிச் சென்று, தவறு செய்வர், சற்குருவினால் நிருவாணதீக்கை பெற்றுத் தன் குருவினால் விதிக்கப்பட்ட சட்ட திட்டங்களைக் கைக்கொள்ளாத ஒரு சிலர் தவறுதற்கும் வாய்ப்புண்டு. இவர்கள் மனந்திருந்தி, உறுதியுடன் சென்று, சிறந்த ஆசிரியரால் துறவுபெற்றுக் காவியுடுத்து, கானகத்த உண்டு, சோர்சடைதாழச் சுடரோம்பி, கடவுளை வழிபடின் 'தவசி' முதலான பெயர்களைப் பெறுவர்.

## 12. தவசியின் திறம்

முத்திபெறு தபித்திறந்தான் படித்தல் கேட்டல்
முழுதுணர்ந்த சீடர்களைத் தேடல்வித்தை விளக்கல்
புத்திமிகுந் த(போதனர்கள்) சங்கக்கிருதம் பேசல்
பொருவில்தொண்டு கு(ண்டி)கைசங் கிதாமந்திரம் விட்டுப்
பத்தியுடன் கணலிங்கப் பூசைசெய்து (தரிசி)த்துப்
படர்காட்டிற் றருநிழற்கீழ் நாரில்லா விடத்திற்
(கை)த்தலத்தால் யாசகம்பெற் றுழியருந்திக் கண்ட
கலைச்சின்னத் துன்னற்கீழ் கவுபீனந் தரிப்பான்!

***உரை:*** வீடுபேற்றினைப் பெறத்தக்க தவசிகளுடைய செயல், ஞான நூல்களைப் பயிறல், அவைகளைப் படிக்கப் பக்கம் நின்று கேட்டல், நல்ல சீடர்களை ஆய்ந்து அமர்த்திக்கொள்ளுதல், அவர்களுக்குத் தான் கற்ற வித்தை முதலானவற்றைச் சொல்லித்தருதல், அறிவிற்சிறந்த பிற தவசிகளுடன் கலந்துரையாடல், தண்டு கமண்டலத்துடன் சங்கிதா மந்திரம் விடுத்து, மிகுந்த பக்தியுடன் கணலிங்க பூசைசெய்து, இறைவனைக்கண்டு, அடர்ந்த கானகத்தில், மரநிழலில் வெறுந்தரையில் தங்கி, ஒருக்கால் பசியெய்திய போது, அறச்சோற்றினைக் கையிலேற்றுச் சிறிது அளவு உண்டு. மான் தோலால் தைத்த கௌபீனத்தினை அரையில் பூண்டு நிலவுதலாம்.

***விளக்கம்:*** தவசியினைத் 'தாபதர்' என்று கூறுகின்றது புறப்பொருள் வெண்பாமாலை. அது 'தாபதவாகை' என்ற தலைப்பில்:

"நீர்பலகான் மூழ்கி நிலத்தசைசித் தோலுடையாச்
சோர்சடை தாழச் சுடரோம்பி-ஊரடையார்
கானகத்த உண்டு கடவுள் விருந்தோம்பல்
வானகத் துய்க்கும் வழி" என்று கூறுகின்றது.

தபசிகள் ஞான நூல்களைக் கற்று, அதுபற்றி அடிக்கடி விவாதித்து வருவர். நல்ல சீடர்களைக் கைக்கொள்வர். தண்டு;

யோக நிட்டை புரியும்போது இடது கையினைத் தாங்கும் கவைக்கோல். கமண்டலம்: அனுட்டானம் முதலானவைகட்காகப் பயன்படும் வகையில், நீர் தாரையாய் விழும் தூம்புடன் கூடிய, சுரைக்குடுக்கையினால் கைப்பிடியுடன் செய்யப்படுவது. இதற்குத் 'தெண்டிகை' என்றும் பெயர். தவத்தோரின் பஞ்ச முத்திரைகளில், தண்டு ஒன்று; கமண்டலம் ஒன்று.

"சங்கிதா" மந்திரம்: ஓம் ஈசானமூர்த்தியே நம: ஓம் தத்புருஷாய நம: ஓம் அகோர இருதயாய நம: ஓம் வாமதேவ குகாய நம: ஓம் சத்தியோஜாத மூர்த்தியே நம எனும் பஞ்சப்பிரம மந்திரங்கள் ஐந்தும், ஓம் இருதயாய நம. ஓம் சிரசே நம, ஓம் சிகாயை நம, ஓம் கவசாய நம, ஓம் நேத்திரேப்யோ நம, ஓம் அஸ்திராய நம எனும் ஷடங்க மந்திரங்கள் ஆறும் ஆகப் பதினொன்று. காலை, மதியம், மாலை ஆகிய மூன்று வேளைகளிலும் செய்யப்படும் சைவானுட்டானத்தில் முக்கிய இடம்பெறுவது இச் சங்கிதா மந்திரம்.

தபசிகள், கந்தமூலாதிகளை உண்டு வாழ்வர். எப்போதாவது ஊரடைந்து (கொங்கண முனிவர்போல) இட்டது கொண்டு சிறிதளவு உண்டு, கானகம் திரும்புவர்.

பொய்யை முற்றிலும் ஒழித்து. நெறிபிறழாது வாழ்பவரிடமிருந்து, பிச்சைபெற்று, உணவு புசிப்பது, பிரமசாரி, வானப்பிரத்தன், சந்நியாசி ஆகியோர் கடன் என்பது மரபு. (இலிங்கபுராணம்)

"ஐயமும் பிச்சையும் ஆந்தனையுங் கைகாட்டி" என்பார் ஆண்டாள் நாச்சியார். உயர்ந்தாருக்குக் கொடுப்பது ஐயம்; தாழ்ந்தாருக்குக் கொடுப்பது பிச்சை என்பார் உரைகாரர். இறந்துபட்ட மான்தோலினை எடுத்துப் பதப்படுத்தியுடுப்பர், தவத்தோர்.

'கணலிங்கம்' என்பது க்ஷணிக லிங்கம் போலும். அப்படியாயின், க்ஷணலிங்கமென்பது, தண்ணீரில் இலிங்கத்தினைப் பாவித்து, ஆத்மார்த்தமாகப் பூசித்தலாம். நீர்நிலைகளில் நீராடியபின், நீரின் மண்டலத்தில், அதாவது தண்ணீரில் வட்டமிட்டு, அதில் இலிங்கத்தை வரைந்து மனதால் பூசிப்பது. அதுவே க்ஷணிகலிங்க பூசையாம்.

## 13. விதுடன், வித்துவான் திறம்

பெறுநற்சீர் வாணலிங்க[1] பூசையிரு வோரிற்
பேசுவிது டன்னோதலா கமங்கள் கேட்டல்
மறுவாற் பொருளதனைச் சிந்தித்த லாதி
மன்னிடும்வித் துவன்றிறந்தான் மாணாக்கர் தேட
லுறுமவர்க்குப் படிப்பித்தல் சிந்தித்த லகற(ல்)
சேருடனுரைத்தல் தனந்தேட லன்னவருக் குதவ
லிறுமக்கா லையிற்சீட ரின்றெனிலங் கவன்பா
லிருந்தபொரு ளெத்தனையு மீசனுக்காக் குதலே !

**உரை:** இவ்விருவரில், பீடம் (ஆவுடையார்) இன்றி வெறும் பாணத்தை மட்டும் வைத்துப் பூசிப்பது, நல்ல ஆகமங்களை ஓதுதல், ஓதக்கேட்டல், அதன் நுண்பொருளைச் சிந்தித்தல் முதலானவைகள் விதுடன் செயலாகும். மாணாக்கரைத் தேடுதல், தேடிய மாணாக்கர்கட்குப் பாடஞ் சொல்லுதல், சிந்தித்தல், பின் அகலுதல், தன்னைச் சார்ந்தவர்க்கு நல்லுரை கூறல், தனந்தேடுவார்க்கு உதவுதல், சீடரில்லாது இறந்தாருடைய பொருள்களை இறைவனுக்கு ஆக்குதல் முதலானவை வித்துவான் திறமாகும்.

*விளக்கம்:* பாணலிங்கம் என்பதனை வாணலிங்கம் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இலிங்கத்தில் மூன்று பகுதிகள் உண்டு. கீழ்ப்பகுதி நான்முகன், நடுப்பகுதி திருமால், மேல்பகுதி உருத்திரன், இலிங்கபூசை செய்தால் மூன்று கடவுளர்களையும் பூசித்த பலன் கிட்டும். நான்முகன் பகுதியும், திருமால் பகுதியும் சேர்த்துச் சக்தி பாகம் என்றும் மேல்பாகத்தினைச் சிவபாகம் என்றும் கூறுவர். அச்சக்தி பாகம் (ஆவுடையாள்) ஆவுடையார் எனப்பெயர் பெறும். ஒருசில சந்நியாசிகளும், ஒருசில சைவர்களும் ஆவுடையாரின்றி, சிவபாகமாகிய பாணலிங்கத்தினையே வழிபடுவர். இலிங்க உரு, அரு உருவத்திருமேனியாகும்.

---

1. பாணலிங்கம்-பீடம் (ஆவுடையார்) இல்லாத லிங்கம்.

ஐயனா ரிதனார், அறிவன் வாகையில்:

> “இம்மூ வுலகி னிருள்கடியு மாய்கதிர்போ
> லம்மூன்று முற்ற வறிதலாற் - றம்மி
> னுறழா மயங்கி யுறழினு மென்றும்
> பிறழா பெரியோர்வாய்ச் சொல்”

என்று கூறுகின்றார் மூதறிஞர்கள் பலர். சந்நியாசிகளாய் வாழ்ந்து மறைந்தனர். தற்போதும் பல மூதறியாளர்களான சந்நியாசிகள், நிலவி வருகின்றனர். சேருடனுரைத்தல் என்பது விளங்கவில்லை.

## 14. தபியிலக்கணம்

*காபரம தேசிகவென் றேபுகழ்ந்து வணங்கி(க்)*
*(கா)தைக்கொண்டு சிவதீக்கை காதலுட னக்க*
*வாபரணத் தொடுவெண்மைப் பொடிசாந்த மணிந்தே*
*யற்றநிய மம்பூசை யாதிகளுஞ் செய்து*
*மாபரனை யுள்நிருவிச் சிவவிரதம் யாவு*
*மதித்தியாறு விரதத்தால் வாடுமுடல் பரித்தே*
*தாபரசங் கம(ர்)வருத்தந் தனைக்கண்டா வழுங்கித்*
*தானழியா நிற்பவனைத் தபியெனச் சாற்றிடுமே !*

***உரை:*** “பரமதேசிகனே ! காக்கவேண்டும்” என்று, குருவினைப் புகழ்ந்து, வணங்கி, வேண்டி, காதைக்கொண்டு, சிவதீக்கைப் பெற்று, விருப்புடன் உருத்திராக்கம் பூண்டு, வெண்ணீறு அணிந்து, சந்தனம் பூசி, தினமும் செய்ய வேண்டிய நியம அனுட்டானம் பூசை முதலானவைகள் செய்து, மேலான பரம்பொருளை மனத்துள் நிறுவி, சிவ விரதங்கள் யாவும் கைக்கொண்டு, அதிலும் ஆறு சிவ விரதங்களைச் சிறப்பாகக்கொண்டு, அதனால் வாடுகின்ற உடம்பினைச் சுமந்து, நிலைத்திணைப் பொருளும், இயங்குதிணைப் பொருளும் பெறுகின்ற துன்பத்தினைக் கண்டு வருந்தித் தான் அழிந்து நிற்பவனைத் ‘தபி’ என்று சொல்லுவார்கள்.

*விளக்கம்:* குருவின் மூலம் தீக்கை பெறவேண்டும் என்பது வற்புறுத்தப்படுகின்றது. சிவசாதனங்கள் அணிதல் அவசியம். அன்றாடம் செய்யவேண்டிய நியமநிட்டைகளைச் செய்து, விரதங்களை அனுட்டித்தல் இன்றியமையாதன. விரதங்களில் சைவர்கட்கு 8 விரதங்கள் முக்கியமானவை. அவை: 1. கார்த்திகை சோமவாரம் (மிகவும் சிறந்தது), 2. பெரிய கார்த்திகை, 3. மார்கழித் திருவாதிரை, 4. தைப்பூசம், 5. மாசிச் சிவராத்திரி, 6. பங்குனி உத்திரம், 7. வைகாசி அட்டமி, 8. ஐப்பசி திரயோதசி(தீபாவளி) ஆம். இவையல்லாத எல்லா சோமவாரம், எல்லாக் கார்த்திகை முதலான விரதங்களும் உகந்ததே. இந்த எட்டு விரதங்களுள், 6 விரதங்களை, ஒவ்வொரு சாரார் அவசியம் கைக்கொள்வார். உண்டி சுருங்கலே விரதமாம். அதனால் தம்முயிர்க்கு வரும் துன்பங்களைப் பொறுத்தலையே உற்றநோய் நோன்றல் என்றார் வள்ளுவர். உயிர்க்கு உறுகண் செய்யாமை வேண்டுவதும் தபியின் இயல்பாம். தபி என்பார் தவசிகள்.

"உற்றநோய் நோன்றல் உயிர்க்குஉறுகண் செய்யாமை
அற்றே தவத்திற்கு உரு" -என்பது திருக்குறள்.

மிக்கதொரு பக்குவத்தின் மிகசக்தி நிபாதம்
மேவுதலும் ஞானம்விளைந் தோர்குருவின் அருளால்
புக்கனுட்டித் தேநிட்டை புரிந்து ளோர்கள்
பூதலத்தில் புகழ்சீவன் முத்த ராகித்
தக்கபிரி யாப்பிரிய மின்றி ஓட்டில்
தபனியத்தில் சமபுத்தி பண்ணிச்சங் கரனோடு
ஒக்கவுரைந் திவரவனை அவனிவரை விடாதே
உடந்தையாய்ச் சிவன்றோற்றம் ஒன்றுமே காண்பர்.

என்பது சிவஞானசித்தியார் சுபக்கம் 8-ம் சூத்திரம் 280-ம் செய்யுள். தாபரம்-கோயிலுள் நிலையாகத் தாபித்த லிங்கம். சங்கமம்-சங்கமர்-சிவனடியார். இவர்கட்கு ஏற்பட்ட இன்னல்களைக்கண்டு அழுங்கி, அதற்காக வருந்துதலும் ஆம். தானழியா-தானழிந்து.

## 15. மாந்திரிகரிலக்கணம்

ஆறுகுளம் படிந்துநீ றணிந்தியம நியம
　　மாதியுஞ்செய் தைம்புலனும் வென்றுகுரு வருளாற்
பேறுதரு மஞ்செழுத்தும் பிரணவமு மவற்றின்
　　பெரும்பொருளு முணர்ந்தகத்துட் பிற(மூாம) லிருத்தி
யேறுபுக ழக்கவட மாதிகரத் தேந்தி
　　யிடமாக முத்திதனை யெய்துவிருப் போடுங்
கூற(றிய) மானதமந் தம்மொலியாற் செபித்தல்
　　கொண்டால் நியதியெனக் கொள்பவன்மாந் திரியே !

**உரை:** ஆறு குளங்கள் முதலான நீர்த்துறைகளில் நீராடி, நீராடி, நியம அனுட்டானங்களை முடித்து, ஐம்பொறிகளைத் தத்தம் புலன்கண்மேற் சொல்லாமற் காத்து, குருவருளாற் பெற்ற ஐந்தெழுத்து மந்திரமாகிய பஞ்சாட்சரத்தினையும், பிரணவத்தினையும், அவற்றின் அரியபெரிய பொருள்களையும் உணர்ந்து, கற்றவற்றை மனத்துளடக்கி, சிறப்புப் பொருந்திய உருத்திராக்க மாலைகளைக் கழுத்திலும் கரத்திலும் ஏந்தி, முத்திபெறும் விருப்பினுடும் சொல்லுதற்கரிய மந்திரங்களை மனதினால் உன்னி, ஓசையுடன் சொல்லுதலைக் குறைத்துக்கொள்ளுதலை நியதி என்று கொள்ளுபவன் மாந்திரியாவான்.

**விளக்கம்:** துறவிகள், கிணறு, குளம், ஆறு, கடல் முதலானவைகளில் நீராடல் வேண்டும் என்பார், ஆறு குளம் படிந்து என்றார். குருவினை வழிபட்டுப் பெற்ற மந்திரங்களை வாய்விட்டுச் சொல்லலாகாது. நாப்புடை பெயராது உச்சரித்தல் வேண்டும். மனதால் நினைத்தல் மந்திரம். "போதிருக்குமிடம் பார்த்து அதைப்பெற்றேயிருப்பது மந்திரமாம்" (ஞானக்கும்மி-115) என்பார் பெரியோர். திருநீறும், உருத்திராக்கமும் சிவச்சின்னங்களாம். இவைகளைப்பற்றி விளக்கமாகக் கூறுகின்றது. எமது "ஸ்ரீதத்துவநிதி " என்னும் (சரசுவதி மகால் பதிப்பு) நூல் தொகுதி 3. மந்திரங்களை உதடு அசையுமாறும், முனு முனுத்தும் ஓசைபட வாய்விட்டும் கூறலாகாது. இங்கு கூறப்பட்டுள்ளது. மந்திரங்களை மனதில் தியானித்து முத்தி பெறும் தவசியே போலும்.

## 16. சிவயோகி இலக்கணம்

கண்டுண்ட புலனடக்கி யாதார மாறுங்
கட்டுரைக்குங் குருவருளாற் கட்டிவளி யிரண்டு
மண்டுண்ட சுழினைவழி யாதார மேறி
யவ்விடத்தி லரும்பொருளு மற்புதமுங் கண்டே
வண்டுண்ட மதுவதுவா மாறுபோல மதியின்
மண்டலத்தி னதியெனவந் திழியுமமிழ்த
முண்டுண்டு தெசநாத முணர்ந்தொளியி னூடே
யொளித்திருப்போன் சிவயோகி யெனவுரைப்ப
ருணர்ந்தே!

***உரை:*** ஐம்புலன்களையும் அடக்கி, ஆறு ஆதாரங்களையும் கட்டுரைக்கின்ற குருவினுடைய திருவருளாற் கட்டி, இடை, பிங்கலை என்னும் இரண்டு காற்றினையும், சுழிமுனை வழியினை ஆதாரங்கொண்டு ஏற்றி, அதனால் அவ்விடத்தில் திகழும் அரிய பொருளினையும், அற்புதத்தினையும் கண்டு, வண்டு மதுவுண்டதுபோல மயங்கி, அறிவு மண்டலத்தினின்றும் பெருகிவரும் நதியெனவே வந்து பாய்கின்ற அமுதத்தினை உண்டு உண்டு. பத்து இந்திரியங்களையும் உணர்ந்து, மேலான பேரொளியினுள் ஒளிந்திருப்பவன் சிவயோகி என்று கூறுவர் கற்றுணர்ந்தோர்.

***விளக்கம்:*** புலன்கள் ஐந்தாவன: சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பன. இதன்மேல் காண்டலையும், உண்டலையும் உணர்த்தியுள்ளார். ஆதாரங்கள் ஆறாவன: மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞா என்பன. மூச்சுக்காற்றினை ரேசக, பூரக, கும்பகஞ் செய்தல் என்பர். அது பிராணாயாமம் எனப்படும். சுழிமுனை புருவ நடுவில் உள்ளது. “கையறவிலாது நடு கண் புருவப் பூட்டு”என்பார் இராமலிங்கர்.

> “ஏற்றி இறக்கி இருகாலும் பூரிக்குங்
> காற்றைப் பிடிக்குங் கணக்கறி வாரில்லை
> காற்றைப் பிடிக்குங் கணக்கறி வாளர்க்குக்
> கூற்றை யுதைக்குங் குறியது வாமே!”

என்பார் திருமூலர்,

"முப்பாழுந் தாண்டிவந்து அப்பாலே சென்றவர்க்கு இப்பார்வை கிடையாது அப்பால் திருநடனம் ஆடுவார்" என்பது நந்தனார் கீர்த்தனை.

"சிந்தை களிக்கக் கண்டு சிவானந்த மதுவுண்டு
தெளிந்தோ ரெல்லோருந் தொண்டு செய்யப்பரிவுகொண்டு"

என்பார் இராமலிங்கசுவாமிகள். சிவயோகியரின் இலக்கணம் கூறவந்த திருமூலர், தனது திருமந்திரத்தில், சிவயோகி எவ்வாறு இருக்கவேண்டும் என்று அறுதியிட்டுக் கூறுகின்றார்.

"பார்க்கின்ற மாதரைப் பாரா தகன்றுபோய்
ஓர்க்கின்ற வுள்ளம் உருக அழல்மூட்டிப்
பார்க்கின்ற கண்ணாசை பாழ்பட மூலத்தை
சேர்க்கின்ற யோகி சிவயோகி தானே!"

என்பது அப்பாடல்.

"எல்லாங் கழன்ற இடமே சிவமென்று
சொல்லா டுவர்கழன்ற தூயோர்கள்-நல்லாய்கேள்
நின்றபடி தானே நிலையா நிலையதனில்
நின்றுவிடு நேராக நீ"

என்பது துகளறு போதம் 59-ம் பாடல்.

யோகியாதற்குரிய வழிமுறைகளை வகுத்துக் கூறிய பின்னர், விந்துவினை செயிக்கவேண்டுமென்றும், அவ்வாறு விந்து வற்றிப்போன பிற்றை, பூரண சந்திரமண்டல அமுதைப் பலமுறை பெருக்கி, ஒளிமண்டலம் அமைத்தவரே சிவயோகியர் என்று கூறுகின்றார்.

"வற்ற அனலைக் கொளுவி மறித்தேற்றித்
துற்ற சுழியனல் சொருகிச் சுடருற்று
முற்று மதியத் தமுதை முறைமுறை
செற்றுண் பவரே சிவயோகி யாரே!"

என்பது அச்செய்யுள். மேலும் அதன் தன்மையினை விரித்துக் கூறுகின்றார்.

## 17. ஞானியிலக்கணம்

அமலவா னருளியவே தாகமங்கள் புராண
மங்கம்வே தாங்கமுத லானவெல்லா முணர்ந்து
சம(ல)சமை யம்பொருணூல் கீழ்ப்படமேற் படுமோர்
தலைவனுயிர் பாசவிதங் கண்டருள்சற் குருவால்
விமலவருள் பெற்றதுவாய் விளைந்தசிவா னந்த
மேவுநிசா னந்தமுமே மிகப்பருகிப் பருகிக்
கமலமல ரடியிணைக்கீழ் கலந்திரண்டற் றோங்குங்
கதிரவனை ஞானியெனக் கழறிடுமாகமமே!

***உரை:*** சிவபெருமான் அருளிய வேதாகமங்கள், புராணங்கள், அவற்றின் அங்கங்கள், வேதாங்கங்கள் முதலான எல்லாவற்றையும் ஓதியுணர்ந்து, மும்மலம், பிற சமையங்கள், பொருள் நூல் முதலானவைகளைக் கீழ்ப்படுத்தித்தான் மேம்பட்டவனான தலைவன், உயிர், பாசம் இவற்றின் விதங்கண்டு, அருளுகின்ற சற்குருவினால் திருவருள்பெற்று, அதனால் விளைந்த சிவானந்தம் நிலவுகின்ற உண்மை யானந்தத்தினை மிக அதிகமாக நாணாளும் பருகி, இறைவனுடைய தாமரைப் பாதங்கள் இரண்டின் கீழ்க் கலந்து, இரண்டற்ற, ஒன்றான நிலையில் நின்று விளங்குகின்ற சூரியனை "ஞானி" என்று ஆகமங்கள் கூறும்.

***விளக்கம்:*** ஆகமம் என்பது இரகசியம், மந்திரம், திருவுருவம், கோயில் ஆகிய முறைகளில், கடவுள் வழிபாட்டை விரிவாகக் கூறுவதாகும். அவரவர் வழிபடுங் கடவுளைக் கொண்டு கூறப்படும் ஆகமங்கள் பலவகைப் படும். அவற்றுள், சிவபெருமான் அருளியது சைவாகமங்கள். அவை காமிகம் முதலான 28. இதனை

"ஆகமம் ஒன்பான் அதிலான நாலேழு
மோகமில் நாலேழு முப்பேத முற்றுடன்
வேகமில் வேதாந்த சித்தாந்த மெய்மையொன்று
ஆக முடிந்த அருஞ்சுத்த சைவமே"

என்று திருமூலர் கூறியுள்ளார்.

புராணங்கள்: பிரமபுராணம் முதலான 18 ஆகும். இவற்றுள் 10 சைவபுராணங்கள், 4 விஷ்ணு புராணங்கள், 2 பிரம புராணங்கள், அக்கினி புராணம் ஒன்று. சூரிய புராணம் ஒன்று, ஆகப் 18-ஆம்.

உபாகமங்கள், உபபுராணங்கள், வேதத்தின் அங்கங்கள் முதலானவைகளும் படித்து இன்புறத்தக்கன. இவற்றை ஓதிக் கற்றல் வேண்டும். கற்றபின் அவற்றை உணர்ந்து அதற்குத் தக நிற்றல் வேண்டும்.

மும்மலம் என்பன: ஆணவம், கன்மம், மாயை, புறச் சமையங்கள் சைவமல்லாத பிற சமையங்கள். பொருள் நூல்-அர்த்தசாத்திரம். குடிமக்களின் நன்மை கருதி அரசன் பொறுப்புடன் நடந்துகொள்ளவேண்டிய விதிமுறைகளைக் கூறுவது. கௌடிலியர் அர்த்தசாத்திரம் முதலானவை பொருணூலாம்.

தலைவன், உயிர், பாசம் எனப் பேசப்படுவன பதி, பசு, பாசம் என்பனவாம். இவற்றின் பேதாபேதங்களை ஆய்ந்துணர்ந்தவரே சற்குருவாம். அத்தகையாரை அடைந்து திருவருள்பெறவேண்டும் என்கின்றார் ஆசிரியர். இரண்டறக் கலத்தலாவது சித்தத்தைச் சிவன்பாலே வைத்து, சிவன் சிவனாகவே மாறும் இயல்பினை அடைவது. ஞானியை 'சூரியன்' என்கின்றார். 'ஞானசூரியன்' என்று மிகப்பெரிய ஞானிகளைக் கூறுவர். சூரியன் தனது கதிர்களை, விருப்பு வெறுப்பற்ற நிலையில் வீசுதல்போல, ஞானி, ஏற்றத்தாழ்வற்ற நிலையில் நான், எனது என்னாமல் விளங்குவான் இதனை,

> "ஞானத்தின் ஞானாதி நான்குமா ஞானிக்கு
> ஞானத்தின் ஞானமே நானென தென்னாமல்
> ஞானத்தில் யோகமே நாதாந்த நல்வெளி
> ஞானக் கிரியையே நன்முத்தி நாடலே!"

என்பார் திருமூலர்.

மேலும் ஞானி சிவப்பேற்றினன். அவனது திருவடிகளை அடைந்தவன் சித்தனாவன் என்றும் கூறுகின்றார்.

"நண்ணிய ஞானத்தின் ஞானாதி நண்ணுவோன்
புண்ணிய பாவங் கடந்த பிணக்கற்றோன்
கண்ணிய நேயங் கரைஞானங் கண்டுவோன்
திண்ணிய சுத்தன் சிவமுத்தன் சித்தனே!"

என்பது திருமந்திரம்.

சிவபெருமானே தனது கருணையினால் ஆன்மாக்களை ஈடேற்றும் பொருட்டு ஞானத்தினை நல்கி, தானே உயிர்க்குயிராய் நின்று, நல்லான்மாக்களை ஒளிவிடச் செய்கின்றார். அதனால் சிவனடியார்களைச் சிவனாகவே பாவித்தல் வேண்டும் என்பார் சிவஞானசித்தியார்.

"அறிவறியான் தனையறிய ஆக்கை யாக்கி
அங்கங்கே உயிர்க்குயிராய் அறிவுகொடுத் தருளால்
செறிதலினால் திருவேடம் சிவனுருவே யாகும்
சிவோகம்பா விக்கும் அத்தாற் சிவனுமாவர்
குறியதனால் இதயத்தே அரனைக் கூடும்
கொள்கையினால் அரனாவர் குறியொடுதாம்
அழியும்
நெறியதனாற் சிவமேயாய் நின்றிடுவ ரென்றால்
நேசத்தால் தொழுதிடுநீ பாசத்தார் விடவே!"

என்பது சுபக்கம்-செய்-323

ஞானியிலக்கணம் கூறவந்த குருந்திரட்டு இவ்வாறு கூறுகின்றது.

"நாதரா வாகு மடைந்தவர்க்குத் தன்னை மீதலாற்பஞ்ச
பூதாகார மிமைப்பொழுதில் விழுங்க லாலே போக்தாவாம்
[illegible] யாவரையு மிரத்த லாலே யாசகனாந்
[illegible] யாசகனென் றுரைத்தார் ஞானியைச்
சான்றோர்!"

## 18. பரமவங்கிசன் (பெரிய சந்நியாசி) (வேறு)

*அந்தணர்முத னால்வரனு லோபரிவர் தம்மிற்*
*றந்தமது வன்னசமை யாச்சிரம நின்றே*
*யிந்தவுல காதிதனு யாவையும்வெ றுத்தே*
*பந்தமறு ஞானபர னேபரம வங்கிசன்.*

***உரை:*** அந்தணர் முதல் நால்வர், அனுலோமர் இவர்கள் தத்தமது வருண சமய ஆச்சிரமத்தில் நின்று, இந்த உலகம் முதலானவற்றையும், உடல் முதலானவற்றையும் வெறுத்து, அவைகளோடுள்ள உறவுக் கயிற்றினை அறுத்த ஞானவானே 'பரம வங்கிசன்'. அதாவது பெரிய சந்நியாசியாவான்.

***விளக்கம்:*** அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் ஆகிய நால்வருணத்தாருக்கும் உரிய ஒழுக்கங்கள், இலக்கணத்தில் இடம்பெற்றுள்ளன. மேலும், சிவப்பிரகாசப் பெருந்திரட்டில் கீழ்க்கண்டவாறு பேசப்படுகின்றது.

"கறைசெயைம் புலன்களைக் கரண நான்குடன்
றுறைதுறை யடக்கலுந் தவமுந் தூய்மையும்
பொறையொடு கல்வியும் பொருந்து ஞானமு
மறையவர் தொழிலென வகுக்கப் பட்டவே"

"தலைமையுங் கொடை யொடு தறுக ணாண்மையு
நிலைமையுங் கீழ்ப்படா நெஞ்சி னீட்டமுங்
கொலைபயில் போர்களிற் புறங்கொ டாமையுஞ்
சிலைமலி தோளினா யரசர் செய்கையே."

உழுதொழில் பசுக்களை யோம்பல் வாணிபம்
வழுவறச் செய்கைதொல் வணிகர் வாழ்க்கையாம்
பழுதற விவர்களைப் பாது காத்தலே
விழுமிய தொழில்கள் வேளாளர்க் கென்பவே."

இவை, 'பரமார்த்த தரிசனம்' என்னும் நூலில் காணப்படுவன. எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகும் அந்தணர் ஒழுக்கத்தினை விரிவாகத் திருமூலர் எடுத்துரைப்பார்.

"அந்தண ராவோர் அறுதொழில் பூண்டுளோர்
செந்தழல் ஓம்பிமுப் போதும் நியமஞ்செய்
தந்தவ நற்கரு மத்துநின் றாங்கிட்டுச்
சந்தியும் ஓதிச் சடங்கறுப் போர்களே!"

என்பது திருமந்திரம்-75. இவர் முதலானவர்கள் தத்தமக்கு விதித்த நெறிப்படி ஒழுகுதலே மேலான ஞானமாம்.

இந்த உலகம் அழியுந் தன்மையுடையது என்பதனை ஞானசம்பந்தர் தனது திருக்கடைக்காப்பினில்,

"இருநில னதுபுன லிடைமடி தரவெரி புகவெரி யதுமிகு
பெருவளி யினினவி தரவளி கெடவிய னிடைமுழுவதுகெட
விருவர்க ளுடல்பொறை யொடுதிரி யெழிலுரு வுடையவ
னினமலர்
மருவிய வறுபத மிசைமுரன் மறைவன மமர்தரு பரமனே!"

என்று கூறியுள்ளார்.

இனி, உடல் அழிதல்பற்றிப் பலரும் கூறியுள்ளனர். காயமே இது பொய்யடா, காற்றடைத்த பையடா என்றும், ஊத்தைச் சடலம், உப்பிருந்த பாண்டம், என்றும் வாய்த்த குயவனார் பண்ணும் பாண்டம் இது-வரவோட்டுக்காகாது என்றும், தூங்கையிலே வாங்குகின்ற மூச்சு-அது சுழிமாறிப் போனாலும் போச்சு என்றும், இழித்துக் கூறப்படும் இவ்வுடல், ஓர்நாள் அழிவுறும் என்பதனை உணர்ந்தவரே ஞானியர், அவர்கள் உடலுக்கு மதிப்புத்தரார். அதனை வெறுத்தொதுக்குவர்.

"மாடுண்டு கன்றுண்டு மக்களுண்டென்று மகிழ்வதெல்லாம்
கேடுண் டெனும்படிக் கேட்டுவிட்டோம்"

எனும் உணர்வுகொண்டு, அவற்றோடு தமக்குள்ள தொடர்பினை நீக்கிவிடவேண்டும். அவற்றின் மீதுள்ள பற்று அறவேண்டும். பற்று அறுவதற்குப் பற்றற்றான் பற்றினைப் பற்றவேண்டும். பற்றினைப் பாசம் என்பர். உயிருக்கும் உடலுக்குமுள்ள தொடர்பினைச் சூட்சக்கயிறு என்பார் மஸ்தான் சாகிபு அவர்கள்.

"சூத்திரப்பாவை கயிறற்று வீழுமுன்
சூக்ஷுக்கயிற்றினைப் பாரடா-அதி
சூக்ஷுக்கயிற்றினைப் பாரடா"

என்பது அப்பாட்டின் தொடக்கம்.

இவ்வாறு உலகோடும் உடலோடும் பற்றற்ற ஞானிகள் 'பரமவங்கிசன்' எனப்படுவர்.

## 19. ஞானிகளிடம் இல்லாதன (வேறு)

பூதலமெண் ஞானநிட்டை புரிந்து ளோர்க்குப்
போதமிகு நானுமில்லை நீயு மில்லைச்
சாதிகுலம் பிறப்பில்லைச் சமையாசா ரங்க
டானில்லை யாசிரமத் தனமுமங் கில்லை
யாதனங்க[1] டேசமிடங் காலந்திக் கில்லை
யகமில்லை புறமில்லை யருவுருவு மில்லை
வாதமொடு தந்திரமு மந்திரமு மில்லை
மதிமிகுசாக் கிரமில்லைச் சொற்பனமு மில்லை.

**உரை:** பூவுலகத்தில் அட்டயோகத்தில் ஒன்றாகிய ஞானநிட்டை (சமாதிநிலை)யினை அடைந்த அனுபவம் மிக்க ஞானியார்கட்கு, நீ, நான் என்ற வேறுபாடு இல்லை. மேல்சாதி, கீழ்சாதி, உயர்குலம், தாழ்குலம், இவற்றினால் பிறப்பு வேறுபாடில்லை, சமயாசாரங்கள் இல்லை. வருணாச்சிரமங்கள் இல்லை. தனக்கென்று பட்டயம் இல்லை. சொந்த தேசம் இல்லை. நிலையான இருப்பிடமில்லை. காலம் இல்லை. குறிப்பிட்ட திசை இல்லை. அகம், புறம் என்ற வேறுபாடில்லை. அருவம், உருவம், அருவுருவம் ஆகியவைகள் இல்லை. வாதுக்கு வரமாட்டார்கள். சிறந்த நூலென்றும் சிறந்த மந்திரங்களென்றும் அவர்கட்கில்லை. மதிப்புமிக்க சாக்கிரம் முதலான உயிர்நிலையுபாதி (அவத்தை) களில்லை. அவற்றுளொன்றான கன நிலையுமில்லை.

---

1. யாசனங்க [illegible].

*விளக்கம்:*

*"நல்லமு தூட்டினு நஞ்சை யூட்டினுந்*
*துல்லிய மாக்கினுந் தொழிலை மாற்றினும்*
*கல்லினும் பொன்னினு மொத்த காட்சியர்*
*சொல்லிறந் தோரேனத் தொகுத்த தெங்கணும்."*

என்று தத்துவ ரத்னாவளி கூறுகின்றது. முப்பாழுந்தாண்டி அப்பாலே சென்றவர்க்கு இப்பார்வை கிடையாது.

*"ஆதியாகி யண்டாண்ட மப்புறத்து மப்புறம்*
*சோதியாகி நின்றிலங்கு சுருதிநாத சோமனை*
*போதியாமல் தம்முளே பெற்றுணர்ந்த ஞானிகள்*
*சாதிபேத மென்ப தொன்று சற்றுமில்லை யில்லையே!" -217*

என்பார் சிவவாக்கியர். பின்னரும்,

*"ஆதியில்லை அந்தமில்லை ஆனநாலு வேதமில்லை*
*சோதியில்லை சொல்லுமில்லை சொல்லிறந்த தூவெளி*
*நீதியில்லை நேசமில்லை நிச்சயப் படாததும்*
*ஆதிகண்டு கொண்டபின் னஞ்செழுத்து மில்லையே!" -427*

என்று கூறுகின்றார். சாதி மதங்கள் ஞானிக்கில்லை.

"இருட்சாதி தத்துவச்சாத்திரக் குப்பை" என்ற இராமலிங்க வள்ளலார். "மருட்சாதி, சமயங்கள், மதங்கள் ஆச்சிரம வழக்கு எல்லாம் குழிவெட்டி மண்மூடிப்போட வேண்டும்" என்கின்றார். மேலான ஞானிகள் கண்ட கோயில் தெய்வமென்று கைதொழமாட்டார்கள். அது வேறுபாடற்ற நிலை.

ஞானிகள், தங்களை விளம்பரம் செய்துகொள்வதில்லை. அப்படிச் செய்துகொண்டால் அவன் ஞானியில்லை.

"வெட்ட வெளிதன்னை மெய்யென் றிருப்போர்க்குப்
பட்டய மேதுக்கடி -குதம்பாய் பட்டயம் ஏதுக்கடி." -1

என்பார் குதம்பைச் சித்தர். அளவில்லா ஞானம்பெற்ற பெரியோர்கள், "யாதும் ஊரே! யாவரும் கேளிர்!" எனத்திரிவர். ஊர் கேட்டக்கால், சித்தர், (தாயின் கருவில் தோன்றியதனால்) 'கருவூர் 'என்று கூறியதாக அறிகிறோம். ஆதிசங்கரர், கொல்லன் உலைக்களத்து உருகிய இரும்புக் குழம்பினை உண்டதாகக் கூறுவர். இவ்வாறு பல செய்திகள் முற்றும் துறந்த முனிவர்கள். ஞானிகள் முதலானோரால் அறியக்கிடக்கின்றன.

## 20. யோகிகளியல்பு

*புண்ணியபா வங்களிலைப் போகமுமே யில்லை*
*புகழ்ச்சியில்லை பொய்யு(மில்லை) மெய்யு மில்லை*
*நண்ணியநல் விரதமில்லை யுறவுபகை யில்லை*
*நன்மையில்லை தீமையில்லை நாடுபொரு ளில்லை*
*யெண்ணியமுக் கரணமில்லை யின்பதுன்ப மில்லை*
*யியம்புநசை வசையில்லை யிகபரமு மில்லை*
*திண்ணியவாங் காரமில்லைத் திரிகுணமு மில்லைச்*
*சித்தநினை வில்லைமனத் திகைப்புமவர்க் கில்லை.*

*உரை:* ஞானிகளாக யோகநிலையில் உள்ளார்க்குப் புண்ணியம், பாவம் கிடையாது. இன்ப துன்பங்களில்லை. புகழ்ச்சி(யிகழ்ச்சி)யில்லை. பொய்யும் இல்லை. மெய்யும் இல்லை. மேலான விரதங்களை, அவர்கள் கைக்கொள்வதில்லை. உறவென்றும், பகையென்றும் பாராட்ட மாட்டார்கள். நன்மை தீமையில்லை. கைப்பொருள் விரும்பார். மனம், வாக்கு காயங்களால், ஏற்படும் நலந்தீங்கில்லை. அதனால் வரும் இன்ப துன்பங்களில்லை. சொல்லப்படுகின்ற விருப்பு, வெறுப்பு கிடையாது. இம்மை, மறுமையாகிய மண்ணுலக, விண்ணுலக அனுபவமில்லை. வலிமை பொருந்திய இறுமாப்பு(அகந்தை) கிடையாது. இராசத, தாமத, சாத்துவிகம் ஆகிய முக்குணங்களுமில்லை. உட்கரணம் நான்கிலொன்றாகிய சித்தத்தைப் பற்றிய நினைவில்லை. மனமயக்கமாகிய திகைப்பும் இல்லை.

**விளக்கம்:** ஞானியர்தம் சீலம் கூறுங்கால்;

"வேதனை படுத்தினும், விடினு மொப்பவர்
சாதலும் வாழ்தலும் ஒக்குந் தன்மையர்
யாதொரு பொருளினு மிசைவி லாதவர்
ஊதியம் அதுதனை உணர்ந்த உத்தமர்" - என்றும்,

"வையினும் வாழ்த்தினும் மலர்கொ டேத்தினும்
வெய்யவா ரெரியிடை வீழ நூக்கினு
மெய்யினு மெறியினு மியாது செய்யினு
நைவொடு மகிழ்விலர் ஞானி சீலமே!" - என்றும்,

'தோன்றி' என்னும் "தத்துவ ரத்னாவளி" கூறுகின்றது. மேலும்,

"செற்றிலென் புகழிலென் செஞ்சாந் தணியிலென்
மத்தகத் தேயுளி நாட்டி மறிக்கிலென்
வித்தக நந்தி விதிவழி யல்லது
தத்துவ ஞானிக டன்மைகுன் றாரே!" - என்றும்,

"ஆனை யுழக்கிலென் னம்பூ டறுக்கிலென்
கானத் துழுவை கலந்து வளைக்கிலென்
ஏனப் பெரும்பன்றி யெங்கு மடக்கிலென்
ஞானத் தவர்க ணன்சுழி யாரே"

என்றும் திருமந்திரம் கூறுகின்றது.

"புண்ணிய பாவ பலன்களுங் கருதார் பூசியார் புனலினைத்
தீர்த்தம்
பண்ணிய பதுமை தெய்வமென் றுணரார் பட்டினி
விடார்மகம் பண்ணார்
மண்ணிய மணிமந் திரவவிழ் மதியார் வடிவிலோர்
குறிகொளார் மற்று
மெண்ணிய கரும மியாவையுஞ் செய்யா ரிம்மையு
மறுமையு மிகழ்ந்தார்"

என்று குறுந்திரட்டு கூறுகின்றது.

## 21. சிவஞானியர் இயல்பு

கன்மமது போனியமங் காட்டாது பாகங்
காட்டுமல மெங்குமதிற் கதிதருமெஞ் ஞான
நன்மைதரு சாதிகுலம் பிறப்பொழுக்கங் கால
நாடாது நாடியிடு நாய்க்கெறிபொன்[1] மற்றுஞ்
சின்மயமா மரனருளாற் சிவஞான முடையோர்
திரியக்குச்[2] சாதிகளாய்த் திரிந்தாலு முயர்ந்தோ
ரன்னவர்தம் பெருமையினை யறிவுடையோ ரறிவ
ராகமத்தின் முடியானு மளக்கவரி தன்றே[3]!

**உரை:** இருவினைகளைப் போல, அதன் அதன் முறைமையினைக் காட்டாமல், எப்போதும் பக்குவம் காட்டுகின்ற, போதும் என்கின்ற பேராசையற்ற குணத்தினைக் காட்டி, அதனால் மெய்ஞ்ஞானப் பேறு பெறுவர். நன்மை தருகின்ற சாதி, குலம், பிறப்பொழுக்கும், காலம் இவற்றை நாடாது, வெறுத்த நிலையில், பொன்னேயாயினும், அதனை நாயிடத்தில் எறியின், அது எவ்வாறு பொருட்படுத்தாதோ அவ்வாறு திகழ்வர் ஞானியர். ஞானமாயிருக்கின்ற சிவனருளால், ஞானம் அடைந்தவர்கள், கீழ்ச்சாதியினரா யிருப்பினும் உயர்ந்தோரே ! அவரது பெருமையினை அறிவுடையோர் அறிவரேயன்றி ஆகமத்தின் சிகரத்தினாலும் அளக்கமுடியாது.

**விளக்கம்:** உண்மை ஞானிகள் மேலான நோக்குடன் திகழ்வர். ஒரு நாயின் முன்னிலையில் ஒரு தங்கக்காசை வீசினால், அது எப்படி விருப்பமற்றிருக்குமோ அப்படி ஞானிகள் திகழவேண்டுமென்று கூறுகின்றார் போலும். மனிதர்கள், இரவில் மட்டுமென்ன, பகலிலும் கூட பணம்போல உள்ள பொருள்களை, மற்றவர்கள் பார்த்து விடுவார்களோ என்று, சாமர்த்தியமாக எடுத்துக்கொண்டு நழுவுவதைக் கண்டிருக்கின்றோம். மனிதர்கள் இப்படி

---

*1. நாய்க்கெரிப்பொன் என்றுளது. 2. குறுக்கு, 3. இதன் முதலிரண்டடிகளில் தெளிவில்லை. சிற்சில எழுத்துக்கள் குறைபாடுடையவாயுள்ளன போலக் காண்கின்றன.*

இருப்பர். ஆனால் இப்படி இருக்கக்கூடாது; அப்படி இருந்தால் அவன் நாய்க்குச் சமம் என்பதனை:

"வாக்கொடு மனமு மிறந்தி மதுர வாரியா யொழிவற
நிறைந்து
போக்கொடு வரவ தின்றிய வமுதைப் பூரண மாகவுண்
டவர்தாம்
வீக்கிய கான னீரெனும் விடயம் மேவுற முயல்வரோ முயலி
னோக்குறு மந்த ஞானியு நாயு மொத்திடும் வாசியொன்
றிலதே"

என்று 'தத்துவ ரத்னாகரம்' கூறும்.

உண்மை ஞானிகளின் இயல்பினை, பெருமையினை அளவிட்டுக் கூறுதல் இயலாது. இதனை:

"பண்டை நான்மறை பகருதற் கரியவன் பரந்த
வண்ட நாடரு மனந்தகோ டிகளுமா ரமுதா
யுண்ட நாயக னுருவுதன் னுளத்துளே யடக்கிக்
கொண்ட ஞானிதன் பெருமையைக் கூறுவா ரெவரே!"

என்று குறுந்திரட்டு-41 கூறும். இவ்வாறு இல்லாத போலிகளைச் சாடுகின்றார் குறுந்திரட்டு ஆசிரியர். அது:

"சச்சிதா னந்தமாந் தன்னை யெய்தினா
னிச்சியா னொருபொரு ளிச்சை செய்யுமேல்
வைச்சபா லடிசிலை மறுத்தி டாமலே
நச்சுநா யல்லது ஞானி யல்லனே!" -என்பதாம்.

## 22. ஞானியர் செயல் (வேறு)

இன்றுசரி யாதிகளி யற்றிவரம்1 யெல்லாங்
கொன்றுதிரி வாரிவர்கள் கூடும்வகை யாதோ?
நன்றுதரு ஞானமெனி னன்னெறிகள் யாவுந்
துன்றினர்மு னென்றறைவர் சொல்வகை துணிந்தோர்

---

1. சுவடி ஒடிந்துளது.

**உரை:** இன்றைய ஞானிகள் சரியை, கிரியை முதலானவைகளையெல்லாம் முறையாக மேற்கொண்டும். வாய்மை முதலானவற்றையெல்லாம் கைவிட்டுத் திரிவார்களாயின் அவர்கட்குக் கைகூடும் வகைகள் யாதோ? ஒன்றுமில்லை. நன்மையினைத் தருகின்ற ஞானம் என்றால், முன்னதாகவே, நல்ல நெறிமுறைகள் யாவையும் நெருங்கியவர்கள் என்று நூலுரையறிஞர்கள் அறைவர்.

***விளக்கம்:*** சரியை, கிரியை, யோகம் ஆகியவைகளை முறையாகக் கடந்து, ஞானம் பெறுதல் வேண்டும். அதுவே சிறப்பு நெறி. அவ்வாறு பெற்றாலும், நல்லாறு நடத்தல் வேண்டும். ஞானம் முற்றிய நிலையில் உள்ளார்களின் சிறப்பியல்புகள் முன்சொன்னவாறு, அளவிட்டுக் கூறுதற்கரியது. இதனை:

"சரிதங்குணம் விரதஞ்செய றவம்வேதன முழுதும்
பெரிதும்முள னெனவும்மில னெனவும்பிற ரறிவால்
தெரிதந்திட வரிதாம்வகை திரியுந்தெரி வுறுதற்
கரிதென்றரு மறையோதிய தறிவாசற வறிவான்"

என்று குறுந்திரட்டு - *47* கூறுகின்றது.

இச்செய்யுளில், வாய்மை எனுஞ்சொல் வருவிக்கப் பட்டது. அங்கு, ஏடு ஒடிந்திருக்கிற காரணத்தால், உண்மைச்சொல் காணப்படவில்லை. சொற்கள் தெளிவில்லை.

## 23. ஞானியிலக்கணம் (வேறு)

தனுகர ணாதி பந்தந் தற்பர மென்று கூறும்
மனியமி றத்து வங்க ளணுவினோ டான வெல்லாங்
கனிவா[1] வுணர்ந்து பஞ்ச கலையினுட் கழித்து மிக்க
புனிதமெய்ப் பரமு ணர்ந்தோன் புகலரு ஞானி யாவான்.

---

*1. கனியுணர்ந்து எனல் பொருந்தும்.*

***உரை:*** தனுகரண புவன போகங்கள், உறவு கடவுள் என்று கூறுப்படுகின்ற அன்னியமல்லாத தத்துவங்கள், அணுவினோடுடனாகியவெல்லாம், முதிர முழுவதும் உணர்ந்து, சாந்தி, சாந்தியாதீதம், நிவர்த்தி, பிரதிட்டை, வித்தை ஆகிய ஐங்கலையினுட் கழித்து, மிகவும் தூய்மையான, மெய்யாகிய முத்திநிலையினை உணர்ந்தவர் சொல்லுதற்கரிய ஞானியாவார்.

***விளக்கம்:*** தனு கரண புவன போகங்கள், அவற்றோடுள்ள தொடர்பு, கடவுளுண்மை முதலான தத்துவங்கள், நம்மோடிணைந்துள்ளவைகள். அப்படிப்பட்ட சித்தாந்தத்தினை உணர்ந்தவர் ஞானியாவார். அணுவினை ஆய்ந்து, பல்லாண்டுகட்கு முன்னரே கண்டவர்கள் நம் முன்னோர்கள்.

"நுணுக்கரிய நுண்ணுணர்வே" என்றும் "இல்நுழை கதிரின் துன்அணு[1]ப்புரைய" என்றும் மாணிக்கவாசகர் தமது திருவாசகத்துள் கூறியுள்ளார். "பருவதப் பரமாணு ஓட்டை வாசிபோலே" என்று நாச்சியார் திருமொழி உரையாசிரியரும் கூறியுள்ளார். "இறைவன் அணுவினுக்கு அணுவானவன்" என்றும், "பலகோடி அண்டங்களை உள்ளடக்கிய பேரண்டைப் பகுதியை அணுவாகக் காட்டித்தான் பெரியவனானவன்" என்றும் இறைவன் பேசப்படுகின்றான்.

இறைவன் அணுவுக்கணுவாகவும், பெரிதுக்குப் பெரிதாகவும் உள்ளதனை: அணோரணீயான் மகாதோ மஹீயான் ஆத்மா, அஸ்ய ஐந்தோ: நிஹிதோ குஹாயம்! தமக்ரது: பஸயதி வீத சோக: தாது: ப்ரசாதான் மஹிமானம் ஆத்மன: என்று கடோபநிஷத் கூறுகின்றது.

***திருவாசகம், திருவண்டப் பகுதியில்***

"அணுத்தருந் தன்மையில் ஐயோன் காண்க
இணைப்பரும் பெருமையில் ஈசன் காண்க"

---

*1. துன் அணு - பரம அணு.*

என்பார் மாணிக்கவாசகர். அணுப்போன்ற நுண்ணியனாயும், சீர்தூக்கிக் கூறமுடியாத பெருமையில் ஒப்பற்றவனாகவும், ஈசன் இருப்பதைக் கண்டுகொள்க என்பது பொருள். இவற்றை முழுதுணர்ந்தவர் ஞானியர்.

பஞ்சகால மந்திரம் என்பது சைவ அனுட்டானத்தில் அன்றாடம் சிந்தனை செய்யப்படுவது.

மேலான மெய்ப்பொருளைக் கண்டவர் விண்டிலர்; விண்டவர் கண்டிலர். அத்தகு ஞானியர்தம் பெருமையினை,

"அத்துவி தந்தா னாகு மவிகற்பத் தடைந்த போதே
புத்தியி னினைப்பும் போகு போகுறிற் பிறப்பு நேரா
வெத்திகழ் வாலும் பேத மின்மையா லிறையே யென்னுந்
தத்துவ வித்தே யென்றன் தலையினால் வணங்கத் தக்கான்"

என்று சொரூபானந்த சித்தியார் கூறுகின்றது.

## 24. நடமாடும் சங்கரனே ஞானியர் (வேறு)

சாக்கிரத்தி னதீதநிலை தங்கியழுந் திடுவோர்
(தர)ணிமிசைச் சஞ்சார சங்கரரே யன்றோ!
வாக்குமணி முடிசூடு மரசர்தொழு மரசா
யகிலமெல்லா மொருடைக்கீ ழாண்டொளிர்மண்டபத்திற்
(றூ)க்கியநித் திலப்பந்தர் துலங்கரியா சனத்திற்
றுணைக்கவரி யெழுந்திரட்டச் சுரேந்திரன்போலிருந்து
பூக்கமழு மலரணையிற் பூவையர்தம் முலைமேன்
பொருந்துகினும் பொருந்துவரோ சேறளையும் புழுப்போல்.

**உரை:** சாக்கிரம் முதலிய உயிர்நிலையுபாதியைக் கடந்த நிலையில் இருந்து நிறைந்துள்ளோர். இப்பூவுலகில் நடமாடும் சங்கரனே (சிவனே; நடராசனே)யாவர். பலவிதமான மணிகளழுத்திய கிரீடத்தினைத் தரித்துள்ள அரசர்கள் வணங்குகின்ற சக்கரவர்த்தியாய், பூவுலகமெல்லாம் ஒரு குடைக்கீழ் ஆட்சிசெய்து, ஒளிவிடுகின்ற மண்டபத்தில்

தொங்கவிடப்பட்ட முத்துப்பந்தலின்கீழ் ஒளிவிடுகின்ற சிம்மாசனத்தில், இருபுறமும் கவரி இரட்ட, தேவேந்திரன் போல இருந்து, மலர்மணங்கமழுகின்ற படுக்கையில், மெல்லியலார் நகில்மேல் பொருந்தி இன்பம் துய்க்க நேர்ந்தாலும், ஞானியர், சேற்றில் உழலும் புழுவினைப்போல அதனைப் பொருட்படுத்தமாட்டார்கள்.

***விளக்கம்:*** இறைவன்பால் அன்புகொண்டு, அவன் ஒருவன்மீது மட்டுமே பற்றுக்கொண்டு, சரியை முதலான நிலைகளைக் கடந்து, சித்தத்தைச் சிவன்பாலே வைத்து, முப்பாழுந் தாண்டி அப்பாலே சென்றவர்கள் சிவனாகவே கருதப்படுவர். சிவனைவிடச் சிவனடியார்களுக்குப் பெருமை என்பதும், இக்கருத்து பற்றியேயாம். மதுரைத் திருவிளையாடலில், எல்லாம் வல்ல சித்தராசு, இறைவன் வந்தார். அவ்வாறான ஞானிகள், பேரின்ப நிலையையன்றிச் சிற்றின்ப நிலையை விரும்பார்கள். மண்புழு, பிள்ளைப்பூச்சி இவைகள் சேற்றில் வாழும். அவ்வாறு வாழ்ந்தாலும் அவற்றின் உடம்பில் சேறு ஒட்டாது. அத்தன்மைபோல் ஞானியர் உலக மாயையில் திரிந்தாலும், அதனில் ஒட்டாது விளங்குவர் என்பது பெற்றாம்.

"பலன்கள் வேண்டிலப் பரிசெலாம் பலித்திடும் பரமதத்
துவஞானி
நலங்கொணாமமா மந்திர நாடொறு நயந்தவ நீராடுஞ்
சலங்க டீர்த்தமா மவன்றிரு மேனியே சகலதெய்
வமுஞ்செவ்வாய்
மலர்ந்த வாசக மறுபிறப் பெனவரு மயற்பிணி மருந்தாகும்"

என்று பெருந்திரட்டும்,

"பரம்பர முணர்ந்திடு ஞானி பாரவர்
விரும்பிய வகைபெற விளங்கு மேனிதா
னரும்பரம் பரமும்வந் தமர்ந்த தாதலால்
குரம்பையென் றிகழனற் கோயி லென்பவே"

என்று குறுந்திரட்டு (72)ம் கூறுகின்றன.

## 25. ஞானியர் வாழ்க்கை (வேறு)

*மத்துறுந் ததிபோ லுள்ள மறுக்குறு மாயா வேழக்*
*கொத்துறுங் கான்மேல் கொள்ளுங் குஞ்சரப் பாகன்*
*போல்வன்*
*றத்துவ மடைந்தோன் றன்னை தலைவனுக் கீய்ந்து தன்பால்*
*வைத்துறு மவன்றன் பாதன் மலர்மது வுண்டு வாழ்வான்.*

***உரை:*** மத்தினால் கடையப்படும் தயிர்போல, மனம் சுழலுகின்ற மாயையாகிய யானைகள், கூட்டமாய் வசிக்கின்ற காட்டில், மேற்சொல்லுகின்ற பாகனைப்போல்வர். தத்துவங்கள் கைவரப்பெற்றோர், தன்னைத் தலைவனு (கடவுளு)க்கீந்து, அவனது மலர்ப்பாதத்தினைத் தன்பால் வைத்து, அப்பாதமலரினின்றும் வருகின்ற திருவருள் தேனைப் பருகி வாழ்வார்.

***விளக்கம்:*** யானைக்கூட்டங்கள் நிறைந்த காட்டில் யானைப்பாகன் பயமின்றிச் செல்வான். அதுபோல, மாயைகள் சூழ்ந்துள்ள இப்பூவுலகில், ஞானிகள், அதனைப் பொருட்படுத்தாது செல்வர். அப்படிப்பட்ட ஞானிகள், தங்களைச் சிவனுக்கே ஆளாக்கிவிடுவர்.

> "முற்றா வெண்திங்கள் முதல்வன் பாதமே
> பற்றா நின்றாரைப் பற்றா பரவமே!"
> (கோயில் பதிகம்-80) முதல் திருமுறை

என்று திருஞானசம்பந்தரும்,

> "தொடர்கின்றே னுன்னுடைய தூமலர்ச்சே வடிகாண்பான்
> அடைகின்றே னையாறர்க் காளாய்நா னுய்ந்தேனே!"
> (திருவையாறு-பதிகம்-13)

என்று திருநாவுக்கரசரும்,

"சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கும் அடியேன்" (திருத்தொண்டத்தொகை) என்று சுந்தரரும் கூறியுள்ளனர். இப்படித் தன்னைச் சிவனடிக்கே ஆளாக்கியதோடல்லாமல், அவனது பாத கமலங்களைத் தனது

பாத கமலங்கள் தீரும் பொருட்டுத் தம் மனதில் பதிப்பர். அதனால்,

"நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன்" என்பார் அப்பர் அடிகள். மாணிக்கவாசகப் பெருந்தகையார் தமது மணிவாசகமாம் திருவாசகத்தில்,

"தந்தது உன்தனைக் கொண்டது என்தன்னைச்
சங்கரா! யார்கொலோ சதுரர்?"

எனத்தொடங்கும் பாடலில் வேடிக்கையாக விளையாடுகிறார். தன்னைச் சிவனுக்காகினார். சிவனைத் தனக்காக்கிக் கொண்டார். சிவனைத் தான்பெற்றதால் எல்லையற்ற பேரானந்தம் பெற்றார். சிந்தையே கோயிலாகக்கொண்ட சிவன், யாதும் அடையவில்லை. அதனால் சிவனைவிடத் தானே திறமையுடையவர் எனக்கூறுகின்றார்.

இத்தகைய மணிவாசகரை ஒத்தவர்களே ஞானிகள். அவர்கள் சிவனது மலர்ப்பாதங்களைத் தம் மனத்தில் பதியவைத்துள்ளதால், அம்மலர் மதுவாகிய திருவருளை (ப்பருகி) அடைந்து வாழ்வர்.

"காமமா திகள்வந் தாலும் கணத்தில்போம் மனத்தில் பற்றார்
தாமரை இலைத்தண் ணீர்போல் சகத்தொடும் கூடி வாழ்வார்
பாமரர் எனக்காண் பிப்பார் பண்டிதத் திறமை காட்டார்
ஊமரும் ஆவார் உள்ளத் துவகையாம் சீவன் முத்தர்!" -89

என்பது கைவல்ய நவனீதம்.

## 26. நல்லநாளில் யோகிகள் உயிர்விட்டால் நற்பலன் (வேறு)

நாடறிய சிவஞான யோகிமுதல் நல்லோர்
நன்மாதந் திதிபக்க நாள்யோகங் கரணத்
தாடரிய பீடுபுகுந் துடலான தொழிந்தா
லோங்குபல நலனெவையுந் தாங்குமா சுலகே
பாடரிய தீவருடந் திங்கள்திதி வாரம்
பக்கநாள் யோகமுத லானவையுட் பகர்ந்தோர்
கூடரிய கதியடைந்து கொண்டவுருக் குலைந்தாற்
குறையுளதா நிறையுளதாங் குவலையங்கா வலர்க்கே!

***உரை:*** சிவஞானம் கைவரப்பெற்ற ஞானிகள், உலகோர் அறியுமாறு, நல்ல திங்கள், நல்ல நாள், நல்ல (சந்திரனாள்) திதி, நல்ல(பட்சம்) பக்கம், நல்ல(யோகம்) உயர்ச்சி, நற்செய்கை (கரணம்) இவைகளின் நடுவிலான நல்ல நேரத்தில், பெருமை சேர்ந்த உயிரானது உடலைவிட்டு நீங்கினால், மேலான பல நன்மைகள் எல்லாம் எய்தும். அதுவல்லாமல், அற்பமான இந்த உலகத்திலே சொல்லுதற்கரிய தீயவருடம், திங்கள், திதி, வாரம், பக்கம், நாள், யோகம் முதலானவையுள் உடலைவிட்டாரென்று சொல்லப்படுவோர், தான்கொண்ட உருக்குலைந்ததால், நிறைவினை உடைத்தாகிய, உலகினைக் காக்கின்ற அரசர்கட்குக் குறைபாடுளதாம்.

***விளக்கம்:*** சிவயோகிகள் நல்லநாளில் உயிர்விடுவர். அவர்கள், தமது தவவலிமையால், தாம் உயிர்விடும் நாளை முன்னதாகவே குறிப்பிட்டு, எல்லோருடைய முன்னிலையிலும் தம்முடைய உயிரைத் தாமே தம் உடலைவிட்டுப் பிரித்துக்கொண்டு சென்று, இறைவனுடன் கலப்பர், என்பர். அவர்களே உண்மை ஞானியர் எனப்படுவர். அவ்வாறு கூறாதிருப்பினும், நல்ல சிவயோகிகளின் உயிர் பிரியும் நாள், எல்லாவகையிலும் நல்ல நாளாகவே இருக்கும். அதனால், நாட்டுக்கு நன்மை ஏற்படும். அவ்வாறல்லாத போலிகள் தீய நாளிலேயே உயிர்விட நேரிடும்.

இங்கு உருக்குலைந்தால் எனலால் நல்ல ஞானிகளுடைய (உருவம்) உடல் தாக்குண்டு இறந்தால், அது அந்நாட்டை ஆளும் அரசர்க்குத் தீங்கிழைக்கும். அதுபற்றி எமது மகால் பரமானந்தயோகி சரித்திரத்தில் கூறப்பட்டுளது.

> "வளர்பிறை யிற்றேவர் தம்பாலின் மன்னி
> உளரொளி பானுவின் உள்ளே யொடுங்கித்
> தளவிற் பிதிர்பதந் தங்கிச் சசியுள்
> உளதுறும் யோகி யுடல்விட்டால் தானே!" -*(1865)*

என்னும் பாடலில், சிவயோகி வளர்பிறையில் தன்னுடலை நீத்தால், அவ்வுயிர் புறப்பட்டு, துறக்க உலகம் சென்று தங்கிப்பின், ஞாயிறுலகஞ் சென்று தங்கிப்பின் பெற்றோர்

சென்றடைந்த உலகஞ்சென்று, பின்னர், திங்கள் மண்டிலத்தே நிலைத்திருக்கும் என்று திருமூலர் கூறுகின்றார்.

## 27. ஞானிகள் மரித்தால் மீண்டும் பிறவார் (வேறு)

தற்சொரூப முணர்ந்து(யி)ருட் டலைவனையு மறிந்து
சாக்கிரா தீதம்போய்த் தங்கிநிறைந் தெ(தான்றாச்)
சிற்சொரூபா நந்தியாய்ச் சிறையுநீத் தோரைச்
சிறந்தபரி பூரணமா னாரெனென்போன் சிவமா
மற்சொரூப மானுடத்த[1] கிலமன்பா லெண்ணி
யவனைமரித் தானென்றா னருநரக மாழ்ந்(த)தே
யெற்சொரூப மாகியெழுந் துலகமெல்லாம் விளக்கு
மிரவிமதி யுள்ளளவு மிளைப்பனிவ னென்றான்.

***உரை:*** தனது உண்மை உருவத்தினைக்கண்டு, உயிருள் தலைவனை(கடவுளை)யும் அறிந்து, சாக்கிராதீதத்திலே சென்று தங்கி நிறைந்து, ஒன்றாகிச் சிற்சொரூபானந்தியாய்ச் சிறையாகிய உடலை நீத்தோரைச் சிறந்த பரிபூரணமெய்தினார் என்போர்கள், சிவமேயாவர். அல்லாத உருவத்தினையுடைய மானிடர்கள், உலகத்து அன்பால், அவரை, மரித்தார் என்றால், அவர்கள் அருநரகிலாழ்ந்து வருந்துவார்கள். ஒளிமயமாகி யெழுந்து உலகமெல்லாம் விளங்கச் செய்கின்ற ஞாயிறு, திங்கள் உள்ளளவும் மெலிவடைவார்கள் என்பர்.

***விளக்கம்:*** ஞானிகள் உயிர்நீத்தால் பரிபூரணமடைந்தார் என்று சொல்லுதல் வேண்டும். அப்படிக் கூறுபவர்கள் சிவமேயாவர். அவ்வாறு கூறாது, மரித்தான் என்று கூறினால், நரகமடைவர் என்பதாம். பரிபூரணம் என்ற சொல் முழுமையைக் குறிக்கும். எங்கும் நிறைந்தோன், கடவுள், சிவபிரான், இவ்வாறு பொருள்படுஞ் சொல் பரிபூரணன் என்பதாம் முழுஞானம் அதாவது பரிபூரண ஞானம் பெற்றவர்கள் ஞானிகள்; யோகிகள், அதனால் அவர்கள் உயிர்விட்டார் என்று கூறுவதில்லை. உடலைவிட்டார் என்று கூறப்படும். உடலைவிட்ட பொருள் உயிர், உயிரின் துணைகொண்டு இயங்குவது உடல், உயிர் இன்றேல், அது

1.மாமுடைத்த என்றுளது.

உடலல்ல; பிணம் எனப்பெயர் பெறும். பேரினை நீக்கிப் பிணமெனப் பெயரிட்டு என்பது ஈண்டு சிந்திக்கத்தக்கது. ஆகவே ஞானியர் பரிபூரணம் எய்தியதைக் குறிப்பிடும்போது இறைவன் திருவடி சேர்ந்தார் என்ற பொருளில், பரிபூரணம் அடைந்தார் என்ற சொல்லையே கையாளவேண்டும். அவ்வாறு கூறாவிடில் நமக்குத் துன்பம் நேரிடும் என்பதனைக் குறிக்கின்றார். அதனால்தான் மனிதர்கள் இறப்பினும், இறைவனடி சேர்ந்தார், சிவபதம் அடைந்தார், வைகுந்தம் அடைந்தார் என்றெல்லாம் கூறுவர். மரித்தார் என்ற சொல்லையாண்டும் பயன்படுத்தலாகாது.

"ஊனமில் ஞானிநல் யோகி யுடல்விட்டால்
தானற மோனச் சமாதியுள் தங்கியே
தானவ னாகும் பரகாயஞ் சாராதே
ஊனமில் முத்தராய் மீளார் உணர்வுற்றே."

-(1869) என்பார் திருமூலர்.

## 28. சமாதிக்குரியார்

பரமவங்கி சன்முதலாம் ஞானிகட்கும் யோகப்
பான்மையர்க்கும் மாந்திரிக்கும் பரவுதபோ தனர்க்கும்
வரமதருள் தபோவெதிக்குஞ் சிவாக்கினியை யுதர
வன்னிதனி லேயொடுக்கும் விதுடவித்து வரராந்
திரமருவு மெதீசுரர்க்குஞ் சமாதியென்ப ரந்தச்
சிவாக்கினியை யொடுக்காத விதுடவித்து வரர்க்குத்
தரமருவ வக்கினியாற் றகனமீ[1] ரிடத்துந்
தண்டு(வுபீ)னமுடன் சாற்றுதொழில் புரியே!

*உரை:* பரமவங்கிசன் (பெரிய சந்நியாசி) முதலான ஞானவான்கட்கும் சிவயோக நிலையில் இருப்பார்க்கும், மாந்திரிகட்கும், போற்றப்படுகின்ற தவவலிமையுள்ளார்க்கும், வரந்தரத்தக்க தவத்தினையுடைய எதிகட்கும், சிவாக்கினியை வயிற்றுத்தீயினிலே ஒடுக்கும் விதுடவித்துவரர்களாகிய, முத்திரையை விரும்புகின்ற எதீசுவரர்களுக்கும் சமாதி வைத்தல் வேண்டும். முற்கூறியவாறு, சிவாக்கினியை

---

1. றக்கன என்றுளது.

ஒடுக்காத விதுடவித்துவரரை, அச்சந்தரத்தக்க தீயினால் சுட்டெரிக்க வேண்டும். மேற்கூறிய சமாதி, சுட்டெரித்தல் ஆகிய இரண்டிடத்தும், அவரவர்கள் தாங்கியிருந்த தண்டு, கோவணம் ஆகியவைகளுடன் அவற்றைச் செய்தல் வேண்டும்.

**விளக்கம்:** பரம வங்கிசனாகிய பெரிய சந்நியாசி யிலக்கணம் முன்பு கூறப்பட்டது. இவர் முதலானவர்களைத் தாங்கியிருந்த உடலினைத் தீயிடலாகாது.

'பரம்பர முணர்ந்திடு ஞானி பாரவர்
விரும்பிய வகைபெற விளங்கு மேனிதா
ளரும்பரம் பரமும்வந் தமர்ந்த தாதலாற்
குரம்பையென் றிகழனற் கோயி லென்பவே'

என்னும் குறுந்திரட்டு 72-ம் செய்யுளின்படி, அது இறைவன் குடியிருந்த கோயிலாகும். எனவே, அதனைச் சமாதி செய்தல் வேண்டும். வயிற்றக்கினி என்பது பசித்தீ எனப்படும் மூலாக்கினி.

"மூலா தாரத்து மூண்டெழு கனலைக்
காலா லெழுப்பும் கருத்தறி வுக்கே!"

என்பது பெரியோர் வாக்கு. ஞானிகள், தாங்களாக்கையைத் தாங்களாவே, ஞான வெந்தீயினாற் சுட்டனர். அதனால், பிறகு தீயினாற் சுட வேண்டியதில்லை. இதனை,

"ஆறிய ஞானிக ளாக்கை முன்னமே
தேறிய ஞானவெந் தீயிற் சுட்டனர்
வேறினி யிவ்வுடல் வேவ வென்றுரை
கூறவுந் தகாதெனக் குரவன் கூறுவ[illegible]."

என்று மெஞ்ஞானவிளக்கம் கூறுகிறது. (பெருந்திரட்டு 7:3)

அவர் தம்மைக் குகை செய்தல். புண்ணியமாம் என்பதனை:

அந்தமில் ஞானி அருளை அடைந்தக்கால்
அந்த உடல்தான் குகைசெய் திருத்திடில்

சுந்தர மன்னரும் தொல்புவி யுள்ளோரும்
அந்தமில் இன்ப அருள்பெறு வாரே!
என்று திருமந்திரம் (1876) கூறுகின்றது.

## 29. அட்டசித்தி சமாதி

சமையமுத லவிடேகந் தரித்தனராய் விதித்த
சகலாக மந்தெரித்து1 சருவமுணர்ந் தோரா
யமைதருசற் கருணைய(ரா யு)லகளிப்பான் வந்த
வ்வதார சத்தியரா யானசிவாங் கிசராய்த்
தமையுணர்தற் பரர்களா யற்புதராய் முன்னைச்
சனனமதிற் கிறுதகிறுத் தியராதி யருளாற்
கமைவுடைய ராய்முழுது மவதானரு2 மாகிக்
கூட்டமென்போற் கட்டசித்தி சமாதிக்கன லாகா!

உரை: சமயதீக்கை முதலாக, ஆச்சார்யாபிடேகந் தரித்தவராய் விதிக்கப்பட்ட எல்லா ஆகமங்களும் தெரிந்தவராய், மற்றெல்லாம் உணர்ந்தோராய், பொறையுடையராய், நல்ல கருணையுள்ளவராய், உலகத்தவர்க்கு அருள்செய்வான் வந்து அவதரித்த உண்மையுடையவராய், மேலான சிவஞானம் கைவரப் பெற்றவராய், தன்னையறிந்தின்புற்ற வராய், கிடைத்தற்கரிய வராய், முன்பிறப்பில் தவமுடையவராய், அருளாளர்கட்குப் பொருத்தமுடையவராய், முழுமையான உணர்வினை யுடையவராய், நிறைவான நினைவாற்றலுடையவராய் விளங்குவாருடலை, அட்டசித்தி சமாதி வைத்தல் வேண்டும். இதனுக்குத் தீயிடுதல் கூடாது.

விளக்கம்: இறைவன் எண்குணத்தானென்று பேசப்படுகின்றான். ஆனால் ஈண்டு, பெரிய ஞானிக்கு 13 குணமேம்பாட்டினைக் கூறுகின்றார். ஆதலால், இவர்க்கு அட்டசித்தி சமாதி வைத்நல்வேண்டும். அட்டசித்துக்களாவன: அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் ஆகியவை. அட்டமாசித்தி சமாதி எவ்வாறென்று கூறப்படவில்லை.

1. தெரீத்து என்றுளது. 2. பவீதானரு என்றுளது.

## 30. சமாதிக்குரியவர்கள்

பூசுரன்மன் னவன்வணிகன் புகழ்சற்சூத் திரனூல்
புகலுமின்னால் வரிற்பொய்யாம் புவிவாழ்வைத்
துறந்து
பேசுநெறி மாவிரதம் பாசுபதஞ் சைவப்
பெருஞ்சமையத் தேதேனு மடைந்தாசா னருளா
லாசுதவிர் சாதியுத்தான மானவவி டே[1] (கம்
ஆனதுடன்) நிருவாண மாதிபெற்று முத்தித்
தேசுவிழை போதகன்சா தகனாதி யோர்க்குஞ்
சிறந்தசைவ விரதனுக்குச் சமாதியென்றே செப்பும்.

***உரை:*** அந்தணர், அரசர், வணிகர், புகழப்படுகின்ற நல்ல வேளாளர் என்று, நூல்களால் பேசப்படுகின்ற இந்த நால்வரில், பொய்யான இந்தப் பூவுலக வாழ்க்கையைத் துறந்து, நல்ல நெறிமுறைகளைக் கூறுகின்ற, மாவிரதம், பாசுபதம், சைவப்பெருஞ்சமயம் இவைகளில் ஏதேனுமொன்றைச் சார்ந்து, அம்மதத்தலைவரருளால், உயர்மனித தத்துவமான நீராட்டம் பெற்று, நிருவாண தீக்கையும்பெற்று, முத்தியை விரும்புகின்ற போதகன், சாதகன் முதலானவர்கட்கும், சிறந்த சைவவிரதனுக்கும் சமாதிவைத்தல் வேண்டும் என்று கூறப்படும்.

***விளக்கம்:*** முன்பு 28-ம் பாட்டில் சமாதிக்குரியார் யார் என்பதனைக்கூறி, மேலும் கூறுகின்றார். சுருங்கக் கூறுமிடத்து, சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார் எல்லார்க்கும், சமாதி அமைத்தல் வேண்டும் என்பதாம்.

## 31. தீயிட்டால் வரும் கேடும் சமாதியினால் வரும் நன்மையும்

மாற்றரிய சைவசந்நி யாசிகட்குந் தபிக்கு
மாந்திரிக்கும் யோகிக்கும் ஞானிமுத லோர்க்குஞ்
சாற்றரிய சமாதியே சமைத்திடுக வன்றித்
தழலூட்டி லூட்டினதாஞ் சங்கரன்றன் கோயி

*1. இப்பகுதி மூலத்தில் இல்லை. சீர் குறைவுக்குச் சேர்க்கப்பட்டுள்ளது.*

வேற்றமிகு பஞ்சமாஞ் சமாதியில்வைத் தனனே
லெண்டிசையுங் கொண்டரச னிந்திரன்போல்
வாழ்வான்
றோற்றமிகு சராசரங்க ளானவெல்லாந் தழைப்பத்
தூயதிங்கண் மும்மாரி சொரிந்திடுமம் புவிக்கே!

***உரை:*** மாற்ற அரிய சைவ சந்நியாசிகள், தபிகள், மாந்திரிகள், யோகிகள், ஞானிகள் முதலானோர்க்குச் சொல்லுதற்கரிய சமாதியே செய்திடுக. அல்லது, தீ மூட்டினால், சிவபெருமானுடைய கோயிலைத் தீ மூட்டினதான பலன் ஏற்பட்டு, மிகுந்த (பஞ்சம்) வற்கடம் ஏற்பட்டுவிடும். சமாதியில் வைத்தால், அவ்வூர் அரசன், எட்டுத்திசையரசர்களையும் வென்று, இந்திரன்போல் வாழ்வான். தோற்றத்தைத் தருகின்ற சராசரங்கள் எல்லாம் தழைத்து ஓங்கும். அழகிய பூவுலகில், மாதம் மும்மாரி பொழியும்.

***விளக்கம்:*** சிவயோகிகளுடைய உடலைத் தீமூட்டினால் பஞ்சமும், கேடும் விளையும். அரசன் அழிவான். சமாதி வைப்பின் நாடு செழிக்கும். அரசன் இந்திரன்போல் வாழ்வான். மாதம் மூன்று முறை மழை பொழியும். மெஞ்ஞானவிளக்கம் எனும் நூல்: ஞானிகள் தங்களாக்கையைத் தாங்களே ஞானவெந்தீயினிலிட்டதனால் அவ்வுடலை மறுபடியும் தீயினால் சுடாது சமாதி வைத்துப் போற்றுதல் வேண்டும். என்று கூறுகின்றது. அவருடலைத் தீயிட்டால் வரும் கேட்டினை:

அந்தமில் ஞானிதன் னாகந் தீயினால்
வெந்திடி னாடெலாம் வெப்புந் தீயினி
னொத்திடு நாய்நரி நுகரி னுண்செரு
வந்துநாய் நரிக்குண வாகும் வையாமே! என்றும்,

எண்ணிலா ஞானி யுடலெரி தாவிடில்
அண்ணல்தங் கோயில் அழலிட்ட தாங்கொக்கும்

மண்ணின் மழைவிழா வையகம் பஞ்சமாம்
எண்ணரு மன்னர் இழப்பார் அரசுமே !

என்றும், திருமந்திரம் *1873, 1874*-ம் பாடல்கள் கூறுகின்றன. அடுத்த செய்யுளில்,

புண்ணிய மாமலர் தம்மைப் புதைப்பது
நண்ணி யனல்கோக்கில் நாட்டில் அழிவாகும்
மண்ணி வழியில் அலங்கார பங்கமாம்
மண்ணுல கெல்லாம் மயங்குமனல் மண்டியே !

என்று *(1875)* கூறுகின்றது; அவர் தம்மைப் புதைப்பது புண்ணியமாம். இதனை, திருமந்திரம்[1] *1876*-ம் பாட்டும் கூறும். மேலும்,

"முன்னமே பாகமா மூரல் தீயினாற்
பின்னரும் வேவவேண் டிடுமோ பேசிடா
யன்னதே யிவ்வுட லறிவா லட்டது
பின்னினிச் சுடுவதும் பிழையே யாகுமால்." -கனனவிதி 4

"பிறிவி லாத பிரமபீ சன்னுட
லிறுதி யாவன றீண்டிடி லெங்கணு
மறுகி விற்கிடை கோடி யனலதாய்ச்
செறிவு செய்யுமத் தேசமென் றோதினான்." -கனனவிதி 5

"பாறவை முதல வுண்ணப் பார்தனி லிகழ்ந்து போக்கி
னேறிய செருவா லென்று மிறுதியா மாரி யும்போய்த்
தூறிய பசியு நோயு முறுதியா முயிர்கட் கென்று
கூறினான் ஞான மென்னுங் குறைகடற் கருணைக் குன்றம்."
-கனனவிதி 6

"ஆதலா லிந்தக் காயத் தறிவதாம் பிரம பூசை
யேதம தறவே கொண்ட வியல்பினா லிதன்ற னாம
மோதிய பிரமகோச மெனவறிந்த தோன்கோ சத்தைக்
காதலா லர்ச்சித் துப்பின் களிப்பதே கருமம் கண்டாய்." ஷெ 7

1. இப்பாடலை 28-ம் பாட்டின் விளக்க உரைப் பின் பகுதியில் காணலாம்.

"ஆங்குமற் றரச ரில்லோ ரறநெறி யறியா ராகி
லோங்குநல் யோகி செய்வா னுலகற மோங்கற் காகப்
பாங்கினா லிவணஞ் செய்தாற் பயன்மழை நல்கு மென்மேற்
றீங்கிலா வளஞ்சி றந்து திகழுமத் தேச மென்றும்."

-கனனவிதி 9

என்று, பெருந்திரட்டு கூறுகின்றது.

### பிரம்மானந்த யோகி சரித்திரம்

எமது மகால் காப்பீடு எண். 251-ல் பிரம்மானந்த யோகி சரித்திரம் கூறப்பட்டுள்ளது. (தஞ்சை மராத்திய மன்னர் ஷாஜி அவர்கள் உயிர் நீத்ததும், அவரைச் சமாதி வைக்க வேண்டுமென்று பரப்பிரம்மானந்த யோகியும், பிரம்மானந்த யோகியும் கூறியும் கேளாமல் சுட்டெரித்துள்ளார்கள். அதுபற்றிக் கீழ்க்கண்டவாறு காணப்படுகின்றது.)

குருசாமியவர்கள், தஞ்சாவூருக்கு எழுந்தருளி வந்து அவலுதாரைக்கண்டு பேசினது சொன்னபடி செய்யாமல், இப்படிச் செய்வார்களா? மகாதோஷம் வந்ததே! இப்படிச் செய்யலாமா? என்று கோபம் பண்ணினார். அவலுதார் சொன்னார். சுவாமி? இராசவமிசமல்லவா! பரம்பரையாய் நடக்கிற சம்பிரதாயம் எப்படியோ அப்படி நடக்கவேணும் இப்போது புதிதாய் ஒன்று செய்தால், பூர்வீகம் தவறிப்போகும். உலகத்துக்கும் நல்லாயிராது. புதைத்து விட்டார்கள் என்று சொல்லிக்கொள்வார்களே! சம்பிரதாயம் எப்படியோ அப்படிக் கருமம் முடித்தார்கள் என்றார்.

சம்பிரதாயம் பார்த்தீர்களே தவிர, மகிமை அறியாமற் போனீர்களே! அரசன், தேசாதிபதி, மண்டலாதிபதி இவர்களிடத்திலே சிவம் மாத்திரைப்போது இருக்கும். சாசீராசீபரர்1 சதாசிவப் பிரம்மம் அவர் வாசம் பண்ணின கோயில், மந்திரபிண்டமாகன திருக்கோயில். அது, தகனமானதோஷம், பதினாறு வருஷம் உபாதிக்குமே. ராசாவுக்காகாதே, ராச்சியத்துக்காகாதே, மழை வெள்ளத்துக் காகாதே, பயிர் பச்சைகளுக்காகாதே, சகலமான சீவஜந்துக்களுக்கும் ஆகாதே, உள்மூலம், பிறமூலங்கூடித்தே.

இராச்சியத்தைத் தயிச்சுப்போடுமே. நாலுமுகத்திலேயும் ராச்சியகாரியம் நடக்குமே. வெகுஜனங்களுக்கும், வெகுராச்சியங்களுக்கும் உபாதியாய் வந்ததே. விலை குறைஞ்சு போமே. தானியங்கள் கொள்ளக் கிடையாதே. வானஞ் சுருங்கத் தானஞ் சுருங்கி உலகம் போயாய்ப் போமே! இப்படி வரலாமா? என்று குருசாமியவர்கள், அவலுதாரைக் கோபித்துக்கொண்டார். (இச்சரிதம் பிற்சேர்க்கையாகக் சேர்க்கப்பட்டுள்ளது)

இவ்வாறு கூறியதனால், அரசனிலும் சிறந்தாரைத் தகனம் செய்யலாகாது; சமாதிவைத்தல் வேண்டுமென்பது புலனாகும். ஷாஜி மன்னர் சிறந்த தெய்வபக்தர்: சிவ சிந்தனையாளர்.

## 32. நீராட்டல்

சிவமயமா ஞானிமுன்னோர் சிறையெனவே விடுத்த
திருமேனி தனைப்பீடத் தெழுந்தருளப் பண்ணிப்
பவமகலு மெண்ணெய்மா நெல்லிமஞ்சட் காப்புப்
பஞ்சகவ்வி யம்பஞ்சா மிருதநெய்பாற் றதிதேன்
சுவைதருதீங் கரும்புகனி பாகாமிருத மிளநீர்
தூயநீர்கு (சைமன்)னிபூச் சொன்னோத காதி
நவகலசந் தாபித்து நற்சங்கப் புனலு
நன்முடிமே லஞ்செழுத்தா னவையறநின் றாட்டே.

உரை: சிவமயமாகிய ஞானி, முன் தாம் இருந்த, ஒரு சிறை என்று விட்டுச்சென்ற நல் உடலை, ஒரு உயர்ந்த பீடத்தில் எழுந்தருளச்செய்து, பாவத்தைப் போக்குகின்ற எண்ணெய்க் காப்புச் செய்து, மா, நெல்லி, மஞ்சள் இவைகளின் தூள்கலந்த திரவியத்தூள் காப்புச்செய்து, பால், தயிர், நெய், கோமயம், ஆப்பி,(சாணம்) ஆகிய ஐந்தும் கலந்த பஞ்சாமிருதம் ஆட்டி, தனியாக நெய்க்காப்பு, பாலபிடேகம், தேனபிடேகம், கருப்பஞ்சாறுஆட்டி, கனிவகைகளின் சாற்றினில் சர்க்கரை கலந்து ஆட்டி, இளநீர் ஆட்டிப் பின்னர், தூயநீரினாலாட்டி, அதன்பின்னர் தருப்பையினைப் பரப்பி,

அதில் ஒன்பது குடங்களில் மலர், தங்கம், மழைநீர் முதலானவைகளை நிரப்பிவைத்துப் (பூசித்துப்) பின்னர் எடுத்து, அந்நீராலும், சங்குகளில் நிரப்பி வைத்த தண்ணீராலும், ஐந்தெழுத்தினை ஓதிக்கொண்டே, குற்றமற நின்றுகொண்டே, நீராட்டவேண்டும்.

**விளக்கம்:** ஞானி விட்டுச்சென்ற உடலை நீராட்டும் முறை கூறப்பட்டுள்ளது. சாதாரணமாக, உயிர்நீத்த உடலுக்குச் சிறப்புச் செய்வது மரபு. அதிலும் ஞானிகளுடைய உடலுக்குச் செய்யும் சிறப்பு மேலானது. ஒரு தெய்வத்துக்குச் செய்யும் முழுக்கு அவ்வளவும், அவ்வுடலுக்குச் செய்யவேண்டும். பஞ்சாமிருதம் எனில் நாம் வாழைப்பழங் கலந்ததையே கூறுகிறோம். இங்கு கூறப்பட்டதே உண்மை. நாட்பட்டிருக்கும் பொருட்டு, பால், தயிர் நீக்கி மலைப்பழங்கலந்து பஞ்சாமிருதம் செய்கிறோம். இது பழனியாண்டவனுக்குகந்தது. கனிபாகாமிருதம் எனும்போது, அதனைத் தனியே கனிச்சாறு, சர்க்கரை கலந்தபால் ஆகியவை எனக்கொள்ளினும் பொருந்தும்; அடைப்புக் குறியுள் உள்ள எழுத்து 'ல' போலும். (செல்லரித்துளது) ஆயின், பாலாமிர்தம் போலும் அடுத்து தூயநீர்க்கு என்பதன் பின்னர், செல்லரித்த பகுதி தெளிவில்லை. எனவே, குசைமனி போலும். குசை-தருப்பை. 'மன்னி' என்பதற்கு, 'மனி' என்றுளதோ என்று ஐயப்பாடாயிற்று.

மஞ்சனஞ் செய்தல் என்ற தலைப்பில் திருமூலர்,

> "மீது சொரிந்திடும் வெண்ணீருஞ் சுண்ணமும்
> போது பலகொண்டு தர்ப்பைப்புல் வில்வமும்
> பாத உதகத்தான் மஞ்சனஞ் செய்துபார்
> மீதுமூன் றுக்குமூன் றணிநிலஞ் செய்யுமே!"

என்று (1884) கூறுகின்றார். மேலும்,

"மஞ்சனஞ் செய்து மணியிணை யிருத்திமன் னவுன்மரு
மத்தாகிக்
கஞ்ச நற்பதங் காசினி கதிரவன் கண்டிசைக் கிறைகன்ன

மஞ்சு டர்க்கன லவர்க்கிரு புருவந டுவரியா னுதலென்றே
யெஞ்ச லில்லவர் நாமமோங் காரமுன் னியம்பியர்ச்
சனைசெய்க!" (75)

என்று குறுந்திரட்டு கூறுகின்றது.

## 33. ஆடை அணிவித்தல்

நடுநடுவே தூயபுன லட்டபுட்பந் தூப
நற்றீப நல்கியே யபிடேக முடிவி
லிடுதிரையாற் சூழமறைத் தொற்றாடை சாத்தி
யேகாந்த மாய்க்கௌபீ னாதிகளுங் களைந்து
வடுவில்கடி சூத்திரங்கோ வணமாடை தரித்து
வன்மைதரு பரியங்கத் தெழுந்தருளப் பண்ணி
நெடுமலையா சலச்சந்தம் பைந்தொடைக ளாதி
நேசமுட னலங்கார நிறையச்சாத் துகவே.

*உரை:* முற்கூறிய அவ்வாறு முழுக்காட்டும்போது, இடையிடையே நல்ல நீராலாட்டவேண்டும். ஆட்டியபின், எட்டு வகையான மலர்களை இட்டு, தூபதீபம் காட்டி, இவ்வாறு எல்லா நீராட்டமும் முடிந்தபின்னர், திரையிட்டு சுற்றிலும் மறைத்து, உடலை ஒற்றாடையினால் துடைத்து, ஒருவர் மட்டும் ஏகாந்தமாய் அருகே இருந்து, முதலில் தரித்திருந்து கௌபீனம் முதலானவைகளை நீக்கி, குற்றமற்ற புதிய அரைஞாண், கௌபீனம், ஆடை அணிவித்து, வலிமையுடைய வேறொரு பீடத்திருத்தி, பெரிய மலையில் விளைந்த சந்தனம் இட்டு, நறுமலர் மாலைகள் முதலானவெல்லாம் சாற்றி, அலங்கரித்தல் வேண்டும்.

*விளக்கம்:* உடலை நீராட்டஞ் செய்யும்போது, ஒவ்வொரு பொருளையும் ஆட்டியபின், நல்ல நீரால் அவற்றைப் போக்கிப் பின்னர் தூய ஆடை, திருநீறு, சந்தனம், குங்குமம், மலர் இட்டுக் கற்பூரதீபங் காட்டுவதைக் கண்டிருக்கின்றோம். அட்ட மலர்களாவன: புன்னை, வெள்ளெருக்கு, சண்பகம், நந்தியாவர்த்தம், பாதிரி, நீலோற்பலம், அலரி, செந்தாமரை ஆகியவை.

ஞானிகள், பூப்போல விரும்பத்தக்க கொல்லாமை, ஐம்பொறியடக்கல், பொறை, அருள், அறிவு, வாய்மை, தவம், அன்பு ஆகிய எட்டுக் குணங்களையும் உடையவர்களாதலின், அவர்களை அட்டபுட்பம் சாற்றி வழிபடல் வேண்டும். பைந்தொடைகளாதி என்றதனால் திருநீறு, உருத்திராக்கம் முதலானவையும் அடங்கும். இதனை:

*பாடி யாடிடப் பாவையர் பல்லியம் பலமுழங் கிடமஞ்சட்*
*கோடி யாடைபூ மாலைகூ றலினிற் கொம்பனா*
*ரிடத்தெண்ணெ*
*யாடல் செய்துசெந் நியின்மிசைச் சுண்ணமு மப்பிநின்*
*றவர்க்கியக்கச்*
*சேட வெண்ணெய்சுண் ணங்கடாம் பூலமுஞ் செழுமல*
*ருடன்சாந்தும். (76)*

என்று குறுந்திரட்டு கூறுகின்றது.

## 34. ஊர்தி அலங்கரித்தல்

*சென்னிறப்பட் டாடைகளால் வெண்கவரிக் கொத்தாற்*
*சிறந்தமணிக் கோவைகளாற் செழுமர்ப்பூந்*
*தொடையால்*
*நன்னிறக்கண் ணாடிநிறை மாலைகளாற் கரும்பா*
*னற்பழுக்காய்க் குலையொழுங்காற் பூங்கதலித்*
*திரளாற்*
*பொன்னிறச்சீர் மகுடத்தால் விளங்கிரதத் தாதல்*
*புனிதமுறு செங்கனகப் பல்லக்கி னாத*
*லன்னிறக்கண்டன்றனையொப் பானபெரி யோர்தம்*
*மலங்கரித்த திருவுருவை யெழுந்தருளப் பண்ணே!*

**உரை:** சிகப்புநிறப் பட்டாடைகளாலும், வெண்சாமரைகளாலும், சிறந்த உத்திராக்கம் முதலான மணிமாலைகளாலும், சிறந்த பூமாலைகளாலும், நல்லநிறம் பொருந்திய கண்ணாடிகள் நிறைந்த தொங்கல்களாலும், கரும்பாலும், கமுகங்குலைகளாலும், வாழை மரங்களாலும் அலங்கரிக்கப் பட்ட, பொன்னிறம் பொருந்திய கலச மகுடத்தோடு கூடிய

இரதத்திலாவது, தூய்மையான பல்லக்கிலாவது, திருநீலகண்டனையொத்த சிவஞானி தம்முடைய அலங்கரித்த திருமேனியை, எழுந்தருளச் செய்தல் வேண்டும்.

***விளக்கம்:*** ஞானிகளைச் சமாதிக்குரிய இடத்திற்கு எடுத்துச்செல்ல வேண்டிய ஊர்தியினிலக்கணம் கூறப்பட்டது. மற்ற, இறந்த உடலை எடுத்துச் செல்வதுபோலல்லாமல், ஞானிகளின் உடலை எடுத்துச் செல்லவேண்டிய ஊர்தியின் நியதி கூறுகின்றார்.

## 35. எழுந்தருளச் செய்தல்

எழுந்தருளப் பண்ணியபின் றத்தமினத் தோரா
மெழிற்றீக்கை யுடையவர்க ளிடப்புறநூல் பூண்டே
யழுந்தியவத் திரமனுவை யுச்சரித்துக் கொண்டங்
கப்பெரியோர் வாகனத்தைத் தாங்கிமெல்ல மெல்லத்
தொழுந்தனிமன் னவனருளா லலங்கரிக்கப் பட்ட
தூயதிரு வீதிவலந் தொண்டர்கள்பின் செல்லச்
செழுந்தவளக் குடைகவரித் திரள்தூப தீபஞ்
செவிடுபட முழங்குபல வாத்தியமுன் செல்ல.

***உரை:*** முன்பு கூறியாங்கு அலங்கரிக்கப்பட்ட தேரினாதல், பல்லக்கிலாதல் எழுந்தருளச் செய்து, தத்தமது இனத்தோரார், அழகுடைய தீக்கை பெற்றோர்கள், இடப்பறமாகப் பூணூலை மாற்றித் தரித்துக்கொண்டு, பதிந்த அத்திரமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு, அங்கு, அப் பெரியோருடைய ஊர்தியினைத் தாங்கிக்கொண்டு, மெதுவாக பிறரால் தொழத்தக்க, மன்னவனால் அலங்கரிக்கப்பட்ட தூய்மையான தேர்வீதி (இராசவீதி) வழியாக, வலமாகத் தொண்டர்கள் பின்னே செல்ல, முன்னே வெண்குடை, சாமரக் கூட்டங்கள், நல்ல மணங்கமழும் தூபம், நல்லதீபம் முதலானவைகளுடன், காது செவிடும்படியாக அதிர முழங்குகின்ற பல இன்னிசை வாச்சியங்கள் செல்லவும்.

***விளக்கம்:*** அந்த ஞானியிடம் தீக்கை பெற்றோரும், மற்றோரிடம் தீக்கை பெற்றோரும் பின்வரல் வேண்டும். சிவ

(தீக்கை) பூசை செய்யப் பெற்றவர்கட்குப் பூணூல் உண்டு. மதுரை திருஞானசம்பந்தர் மடத்தில் சிவபூசை தீக்கை பெறுவார்க்குப் பூணூல் அணிவிக்கும் மரபு இன்றும் உண்டு. அவற்றைப் பூசை முதலானதுகள் செய்யும்போது வலமாகவும், இவ்வாறான காரியங்களில் இடமாகவும் தரிப்பது வழக்கம். பல்லக்கைச் சீடர்களும், பக்தர்களும் சுமந்து சென்றால் புண்ணியம் என்பர். பலவகையான மங்கலவாச்சியங்கள் முன்னே முழங்கச் செல்லுதல் வேண்டும். பாடி ஆடிடப் பல்லியம் பலமுழங்கிட என்பது குறுந்திரட்டு. இவ்வாறு எழுந்தருளச் செய்தல் வேண்டும்.

## 36. மங்கல ஒலிகளுடன் புறப்படல்

சங்கங்காக் களமுழங்கத் தாரகைநின் றார்ப்பச்
சல்லரிமத் தளந்தாள மிடக்கைநளி யிரட்டப்
பொங்கங்கா(ர1 ம)ரம்பாடப் போற்றிசைப்போர் போற்றப்
புண்ணியநற் (பல)விதமாந் தோத்திரங்கள் புரிய
வங்கங்கா மடியார்கள் துங்கமுடி மீதி
னஞ்சலிசெய் கரங்களுடன(ரகரவென்) றேத்தச்
சிங்கங்கா முறுமரசன் சதுரங்க மான
சிங்கார வங்கார சேனைகள்முன் செல்ல.

**உரை:** அவ்வாறு ஞானியர்தம் உடல் ஊர்வலமாகப் புறப்படுங்கால், சங்குகள், காளம்(எக்காளம்(அ)காக்களம்) முழங்கவும், தாரைகள் நின்று ஒலிக்கவும், சல்லரி, மத்தளம், தாளம், இடக்கை(உடுக்கை) முதலானவை மிகுந்து ஒலிக்கவும். சீகாமரம், காந்தாரம் முதலான இசைகள் பாடவும். போற்றிசைப்போர்கள் போற்றவும், புண்ணியத்தைத் தரவல்ல பலவிதமான நல்ல தோத்திரப்பாடல்களைப்பாடவும். ஆங்காங்கு, சிவனடியார்கள், தங்களது மேலான சிரசின்மேல் கூப்பி வணங்குகின்ற கரங்களுடன், அரகரவென்று புகலவும், சிங்கமும் விரும்புகின்ற அரசனுடைய நால்வகையான, அழகுபொருந்திய சிறந்த சேனைகள் முன்னே செல்லவும்.

---

1. சொல் தெளிவிலது.

***விளக்கம்:*** பலவகையான மங்கல ஒலிகள் முன்செல்ல வேண்டும். இரண்டாம் வரியின் தொடக்கம் செல்லரித்திருப்ப தால் சொல் தெளிவில்லை. சிவனடியார்கள் சிவபுராணம் பாடுதல் ஈண்டு மரபு. சிவனடியார்கள் அரகர என்று வணங்குவார்கள்.

வணக்கத்தின் முறை: தன்னைவிட அறிவில், வயதில் குறைந்தவர்களை நெஞ்சுக்கு நேரே கைகூப்பியும், தன்னையொத்தவர்களை முகத்திற்கு நேரே கைகூப்பியும், தனக்கு மேலானவர்களையும் கடவுளையும், சிரசுக்குமேலே கைகூப்பியும் வணங்கவேண்டும். சிவஞானி, மேலான வராகலான், தலைக்குமேலே கைகூப்பி வணங்குகின்றனர். நால்வகைச் சேனைகள்: தேர், யானை, குதிரை, காலாள் ஆகும். இவற்றுடன் அரசர் வருவதும் உண்டு. ஞானிகள் உடல் பல்லக்கில் செல்லுங்கால், நிகழவேண்டுவனவற்றை, ஆசிரியர் படம் பிடித்துக்காட்டுகிறார். இதனை,

> *சயசய வெனுஞ்சுருதி சங்கமுட னேபல்*
> *லியமுழவ மேவவுட னேகினவர் வேறோ*
> *ரயமக பயன்றலை தரிக்கி லடிதோறும்*
> *பயனது தரும்பிரம பாதகனு முத்தன்.*

என்று குறுந்திரட்டு (77) கூறுகின்றது.

## 37. மங்கலப் பொருள்கள் முன்செல்லல்

இடமருவு பொன்னால வட்டமெழில் விசிறி
 யெம்மருங்கு மிகநெருங்க விடக்கயங்க ளுடனே
படமெழுது சே(றா)டி பக்கநிரை மேவப்
 பற்பலவா குங்கொடிக ளற்புதமாய் விளங்கத்
தடமருவு பொற்பந்த மணியணியா யொளிரச்
 சரியொலிக்க மடவார்கை வெள்ளொலியல் வீச
வடமருவு முலைமகளி ரெதிராக நடனம்
 வகுத்தவிதிப் படிபுரிய முகவீணை வயங்க.

***உரை:*** பெருமை பொருந்திய பொன் ஆலவட்டம், அழகான விசிறிகள் இவைகள் எங்கும் நெருக்கமாக

விளங்கவும், பெருமை பொருந்திய யானை முதலானவைகள் எழுதப்பட்ட கண்ணாடிகள், பக்கங்களிலே வரவும். பற்பலவாகிய கொடிகள் அழகாக விளங்கவும். மிகப்பெரிய பொன்போன்ற தீவர்த்திகள் மணியொளிபோல வெளிச்சந்தரவும், சச்சரி என்னும் இசைக்கருவி ஒலிக்கவும், மடவார்கள் தங்கள் கைகளிலுள்ள பூக்களைத் தூவவும், மணிவடம் தரித்த நகிலையுடைய மகளிர் எதிர்நின்று முறைப்படி நடனமாடிவரவும், முகவீணை என்னும் வாச்சியம் ஒலிக்கவும்.

***விளக்கம்:*** மங்கலப்பொருள்கள் முன்னே செல்லல் வேண்டும். அதன்படி, ஆலவட்டம் ஆகிய நீண்ட பெரிய விசிறி, சிறிய விசிறிகள், யானைப்படமெழுதிய கண்ணாடிகள், (முகம் பார்க்கும் கண்ணாடிகள்) கொடிகள் முதலானவை வருதல் வேண்டும். முற்காலத்தில், இறைவன் வீதியுலா வரும்போது, நடனமாதர்கள் நடனம் ஆடுவது கண்கொள்ளாக்காட்சியாக இருந்தது. இப்போது அவ்வழக்கம் இல்லை.

## 38. தேவர்கள் தொழல்

*புண்டரிகத் தயனொடுமால் புத்தேளிர் கணங்கள்*
*புவிபுகழு நவகோடி சித்தர்வித்தியா தரர்சூழத்*
*தண்டரளக் குடைநிழற்றுஞ் சமாதிவிழா வெங்குந்*
*தத்தமது பேரன்பாற் சங்கரனென் றெண்ணி*
*யெண்டிசையின் மண்டலிக ரிறைஞ்சிநவ மணிக*
*ளெம்மருங்கு நிறைந்துவிழ விரைத்திடுக மகிழ்வாற்*
*கண்டெமது பதிவிழவிற் கலந்தனனென் றுடுவின்*
*கணங்களெல்லாந் தொகைதொகையாய்க்*
***கலந்திழிதல்** போல.*

***உரை:*** தாமரை மலரில் **வீற்றிருக்கும்** (பிரமன்) நான்முகன், திருமாலாகிய **நெடுமால்,** **வானோர்,** தேவகணங்கள், பார்புகழும் நவகோடி **சித்தர்கள்,** வித்தியாதரர்கள் இவர்கள் **சூழ, வெண்முத்தம் நிறைந்த குடை**

நிழல்செய்கின்ற சமாதிவிழாவினில், எங்கும் தத்தமது பேரன்பினாலே, சங்கரனே, என நினைத்த, எட்டுத்திக்குகளில் விளங்கும் பேரரசர்கள், வணக்கத்துடன் பெருமகிழ்ச்சியாலே, எமது தலைவனுடைய விழாவினைக் கண்டு, அதனில் கலந்துகொண்டோம் என்ற எண்ணத்தாலே, விண்மீன் கூட்டமெல்லாம் பூமியில் உதிர்வன போல, ஒன்பான் மணிகளையும் எல்லாவிடங்களிலும் நிறைந்து விழுமாறு இரைத்திடுக.

***விளக்கம்:*** ஈண்டு ஆசிரியர் எடுத்தாண்ட உவமை சிறப்பாக உளது. எண்டிசை மன்னர்கள் நவமணிகள் இரைத்து, அவை நிறைந்து விழும்போது, விண்மீன்கள் உதிர்வன போல இருத்தல் வேண்டும் என்கிறார். அவ்வளவு அதிகமான மணிகள் இரைக்கவேண்டும் என்பது பொருள்.

## 39. புவியோர் பரவுதல்

*சந்திரவட் டஞ்சூழத் தரைமிசையிற் பெரியோர்*
*தமதுதிரு மேனியெழுந் தருள்செம்பொற் றேர்கண்*
*டிந்திரன்றன் சேனையொடும்(ம் போந்)துதொழா வேத்தி*
*யிறையெனநின் றிரைப்பன(போற் றொல்)புவியோர் வாழ்த்துந்*
*சுந்தரமன் னவனின்றஞ் சிச்சொன்ன மாரி*
*சொரிந்துவரத் தொண்டர்நறு மலர்மாரி தூவ*
*மந்திரஞ்சூழ் திருவீதி வலஞ்செய்து சமாதி*
*மன்னுகுகைக் கியல்தென்பான் முடியாக வைப்பான்.*

***உரை:*** மிகப்பெரிய சந்திரவட்டங்கள் தரையில் சூழ்ந்தது போலத் தரையின்மேல் பெரியோர்கள் ஏறிச்செல்லுதற்குரிய செம்பொன்தேர்கள் செல்வதைக்கண்ட தேவேந்திரன், தன் சேனைகளோடும் மண்ணுலகம் வந்து, இந்த ஞானியுடலை வணங்கித் தொழுது, பெருந்தலைவனைப் போல நின்று, பொன்னை இரைப்பதைப்போல. இம்மண்ணுலகிலுள்ளோரெல்லாம் வாழ்த்துகின்ற, அழகுடைய மன்னவன் நின்று, அஞ்சிப் பொன்னை இரைத்துப் பொன்மாரி பொழிந்துவரவும்.

தொண்டர்கள் நறுமலர்களை இரைத்து, மலர்மாரி பொழிந்துவரவும், வேத ஒலிகள் நிறைந்த திருவீதி வலமாக வந்து, சமாதி வைக்கின்ற இடத்தில் இயற்றப்பட்ட குகையின் தென்பாகத்திலே முடியாக வைப்பார்.

*விளக்கம்:* தேவேந்திரன் பொன்னை இரைப்பது போல, மண்ணுலகத்தவர் பொன்னை இரைத்தனர். சமாதிதலத்தில் பல்லக்கையோ, தேரையோ நிறுத்தும்போது, ஞானியரின் தலை தெற்காகவும், கால் வடக்காகவும் இருக்குமாறு வைத்தல் வேண்டும். வடதிசையில் கைலை இருப்பதாகவும், தெற்கே யமனுடைய நகரம் இருப்பதாகவும் கூறுவர். தெற்கே தலையும், வடக்கே காலுமாக இருந்தால், வடக்கு நோக்கிப் பயணம் செல்வது போலாகும். அது கைலைக்குச் செல்வதைக் குறிக்கும்.

தெற்கு நோக்கிச் செல்வதாக இருந்தால், அது தீமைக்கு எடுத்துக்காட்டு, இராமாயணத்து திரிசடை தீக்கனாக்கண்டு, அதனைச் சீதையிடம் கூறுகின்றாள்; இராவணன் எண்ணெய்த் தலையுடன் கழுதை, பேய் பூண்ட தேரில், தென்திசை நோக்கிச் சென்றனன் என்றுளது. அதனைக் கம்பர்:

> "எண்ணெய் பொன்முடிதொறும் இழுகி ஈறுஇலாத்
> திண் நெடுங் கழுதைபேய் பூண்ட தேரின்மேல்
> அண்ணல் அவ் இராவணன் அரத்த ஆடையன்
> நண்ணினன் தென்புலம் நவைஇல் கற்பினாய் !"

என்று கூறுகின்றார்.

## 40. சமாதித் தலம்

> சற்குருவை முதற்பெரியோர் மணந்தருளைத் தணந்த
> தனுவதனைச் சமாதிவைக்குந் தலங்கடனைச் சாற்றிற்
> சிற்குணன்றன் றிருக்கோயிற் றிகழுமா வரணஞ்
> சிறந்தவர்தா முறைந்தமடஞ் செழுங்காநற் பூமி

நற்குருகா புட்கரணி நதியினது தீர
நறியமலர்ப் பூஞ்சோலை நல்லவனஞ் சாலை
பொற்குவட்டு மலைப்பக்க மிவையாதி தெரியிற்
பொருந்தியிடு மினிக்குகையி னிலக்கணமும்
புகல்வாம்.

**உரை:** சற்குருவாகிய சிவத்தை மணந்து, சக்தியை விட்ட மேலான சிவயோகிகளின் உடலைச் சமாதி வைக்கும் இடம் தன்னைக் கூறப்புகின், பரமசிவன் விளங்குகின்ற திருக்கோயிலில் திகழுகின்ற மதிற்சுவருக்கு உள்பகுதியிலும், மேலான ஞானிகள் வசிக்கின்ற மடத்திலும், சிறந்த பூங்காவிலும், நல்ல நிலத்திலும், நல்ல குருவினுடைய தோட்டத்திலும், குளம், ஆறு இவைகளின் கரையிலும், நல்ல மலர்களைத் தருகின்ற பூஞ்சோலைகளிலும், நல்ல காட்டுப்பகுதியிலும், பெருஞ்சாலை ஓரங்களிலும், பொன்போன்ற சிகரங்களிலுடைய மலையடிவாரத்திலும், இவை முதலானவைகளிலும் தேர்ந்தெடுத்தல் நல்லது. அடுத்த குகையின் இலக்கணம் கூறுவாம்.

*விளக்கம்:* ஞானிகளைச் சமாதிவைக்குமிடம், தூய இடமாக இருத்தல் வேண்டும். கோயில் நிலங்களில் வைத்தல் சிறப்பு, என்பதனால் முதற்கண் கூறினார். பூங்கா, பூஞ்சோலை இரண்டிடத்தையும் கூறுதல், மரங்கள் அடர்ந்த மலர்கள் நிறைந்த இடத்தினையும், நாளும் பூக்களுக்காக ஒதுக்கப்பட்ட (பூக்கொல்லை) இடத்தினையுமாம். மலைக்குகைகளிலும் சமாதிவைத்தல் மரபு. சமாதித்தலம் என்னென்ன என்பதனைத் திருமூலர்.

"தன்மனை சாலை குளங்கரை யாற்றிட
நன்மலர்ச் சோலை நகரினற் பூமி
உன்னருங் கானம் உயர்ந்த மலைச்சாரல்
இந்நிலந் தான்குகைக் கெய்தும் இடங்களே!"

என்றும்,

குறுந்திரட்டு 78-ல்

"பிரசஞ் சிந்தும் பிரம தருக்கீ ழேயாத
லரசின் கீழே யாகுதல் செய்யப் படுமாதி
திரிவன் னத்தோ னாகிற் காயத் திரியோடே
யரிதன் சூத்தமு மத்யய னஞ்செய் தபிடேகம்"

என்றும் கூறுகிறார்கள். பெருந்திரட்டில் நல்லவிட மேவி என்று கூறுகின்றார்.

## 41. குகையளவு

எடுத்தவுயர்[1] தலந்தன்னிற் கிடைத்ததனை யடைந்தே
யெழிலாவின் பாலினால்த் திரத்தாற்போ ரோக்கித்
தடுத்ததனை யுத்திரத்தின்[2] முகமாய்நின் றகழ்ந்திட்
டாழமுழ மூன்றுமுத லாறந்த மாகத்
தொடுத்ததனா ழத்தகலம் பாதிசமை சதுரந்
தொட்டிடுக முனிவோருக் கிரண்டுமுழ மாஞ்சீர்
படுத்ததனைக் கோமயத்தி னான்மெழுகிச் சுத்தி
பஞ்சகவ்வி யத்தானுஞ் செய்திடுதல் பாங்காம்.

***உரை:*** இவ்வாறு, தேர்ந்தெடுத்த இடம் கிடைத்ததனை யடைந்து, அழகுள்ள பசுவின் பாலைக்கொண்டு, அத்திரமந்திரம் கூறிச் சுத்தம் செய்து, வடக்குமுகமாய் நின்று, அதனை அகழ்ந்திடவேண்டும். மூன்றுமுழம் முதலாக ஆறுமுழம் வரையில் தோண்டவேண்டும். ஆழத்தில் பாதியான அகலம் வைத்து, அதே நீளம் வைத்து, சதுரமாகத் தோண்டிடவேண்டும். முனிவர்களாயின், இரண்டுமுழ சதுரம் செய்தல்வேண்டும். அதன் உள்பகுதியைக் கோமயத்தினால் மெழுகவேண்டும். ஆனைந்தினால் சுத்தம் செய்யவேண்டும்.

***விளக்கம்:*** அத்திராய பட் என்பது அத்திர மந்திரம். அவ்வாறு கூறிச்செய்யும்போது, அத்திரத்தேவர் என்னும் (சூல) ஆயுததேவர் வந்து அதனைச் சுத்தம் செய்வார் என்பர். அவரவர் உடலளவுக்குத் தக்கவாறு செய்யவேண்டும். எனக்கருதி,

---

*1. எடுத்தவுயர் என்றுளது. 2. உத்தரம் - வடக்கு.*

மூன்று முதல் ஆறுமுழ ஆழம் என்றார். ஞானியர்க்கு இரண்டுமுழ சதுரம் என்றதனால் 4 முழ ஆழம் போலும். ஆனால் திருமூலர்,

"நவமிகு சாணாலே நல்லாழஞ் செய்து
குவைமிகு சூழவைஞ் சாணாகக் கோட்டித்
தவமிகு குகைமுக் கோணமுச் சாணாக்கிப்
பவமறு நற்குகை பத்மா சனமே !"

(1877) என்றும்,

"நற்குகை நால்வட்டம் பஞ்சாங்க பாதமாய்
நிற்கின்ற பாத நவபாத நேர்விழப்
பொற்பம ரோசமும் மூன்றுக்கு மூன்றணி
நிற்பவர் தாஞ்செயும் நேர்மைய தாமே"

(1879) என்றும் கூறுகின்றார்.

குகை அளவினைப் பதுமாசனம் எனப்படும் தாமரை இருக்கையாக அமைத்தல் வேண்டும் என்கிறார். ஆழம் 9 சாண் (4½ முழம்), அகலமாகிய சுற்றளவு 5 சாண் என்றதனால், வட்டத்தின் குறுக்களவு 5 சாண் (2½ முழம்) போலும், அதனுள் முக்கோணம் 3 சாண் (1½ முழம்) பக்கமுள்ள முக்கோணம். இவை இரண்டும் சேர்ந்த ஆழமே 9 சாண் (4½ முழம்) போலும்.

அடுத்த பாட்டில், அவ்வாறு தோண்டி, குகையின்மேல் வட்டத்தைச் சுற்றிலும் 9 அடி அகலமுள்ள சுற்றுப்புறம் இருக்குமாறு அமைத்தல் வேண்டும். நாற்புறமும் இருந்து, ஐந்து அங்கங்களும் தோயுமாறு படிந்து வணங்கத்தக்கதாய் இடமிருத்தல் வேண்டும் என்கிறார். பஞ்ச அங்கம்:- முழந்தாள் இரண்டு, முன்கை இரண்டு, நெற்றி ஆக ஐந்து உறுப்புக்கள். இதனால் கருவறையருகில் அட்டாங்க வழிபாடு செய்தல் ஆகாதென்றும், பலிபீடத்தின் வெளியில்தான் அவ்வாறு வணங்கலாமென்றும் பெறப்படுகின்றது.

"படியினிரு மூன்றுமுழ மட்டகலம் வெட்டிப்
பழிப்பினவ ரத்தினமணிப் பீடமதி லிட்டு."

என்று குறுந்திரட்டு கூறுகின்றது.

## 42. மணியாசனம்

இக்குகையி னாதிதனி னீராறு பார
மிட்டிகையின் பொடியிடுக விதன்மேன்மஞ் சட்டுட்
டக்கவறு கலநீறு தானுமறு கலமேற்
றசபார முப்புநவ மணிகமலா சனமேல்
மிக்கதிர லிங்காதி பின்புதாவிப் போன
மெஞ்ஞானி முகங்கிழங்கு மேற்காக வைக்கப்
புக்கவன் போலவுருத் தாபிக்க வேண்டிற்
பொருள்வட பால்வதனம் பொருந்தவிருத் துகவே.

*உரை:* இவ்வாறு செய்யப்பட்ட குகையில், முதலில் 12 பாரம் செங்கற்பொடியிட வேண்டும். அதன்மேல், மஞ்சள் துள் ஆறு கலமும், திருநீறு ஆறு கலமும், அதன்மேல் 10 பாரம் உப்பும் இட்டு, நவமணிகளையும் இட்டு, அதன்மேல், கமலாசனமாக ஞானியை வைக்கவேண்டும். இவ்வாறு வைக்கப்பட்ட சமாதியின்மேல், அசைவிலா இலிங்கம் அமைக்க முடிவுசெய்திருந்தால், ஞானியின் முகம் கிழக்கு அல்லது மேற்காகவும், ஞானியைப் போலவே உருவம் சமைத்துவைக்க முடிவு செய்திருப்பின், முகம் வடக்கு நோக்கி இருக்குமாறும் உட்காரவைக்க வேண்டும்.

*விளக்கம்:* மேலே குறிப்பிட்டபடி ஞானியை அமர்த்துவதற்குமுன், அப்பொருள்களை அந்தந்த அளவில் இடுவர். ஒருசிலர், நல்ல அழுத்தமான புதுத்துணியில் ஒரு மெய்ப்பை (உறை) தைத்து, அதனை சமாதித்தலத்தின் அடியில் வைத்து, அதனுள் ஞானியை அமரவைத்து திருநீறு முதலான பொருள்களாற் சிரசளவும் நிறைத்துச் சுற்றிலும், செங்கல்தூள், உப்பு, திருநீறு இடுவர். இது ஒருசாரார் செயல். சமாதியின்மேல் இலிங்கம் எழுந்தருளச் செய்வதாயின் முகம் கிழக்கு நோக்கி அமைப்பர். இடவசதி காரணமாக மேற்கு நோக்கியும் அமைப்பர். உருவம் அமைத்தலுக்கு, முகம் வடக்கு நோக்கி அமர்த்தல் வேண்டும்.

நவமணிகளேயன்றி தங்கம், வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம் ஆகிய ஐம்பொன்களையும் இடுவர். இதனை,

"பஞ்சலோகங்கள் நவமணி பாரித்து
விஞ்சப் படுத்ததன் மேலாசனமிட்டு
முஞ்சி படுத்துவெண் ணீறிட் டதன்மேற்
பொன்செய் நற்சுண்ணம் பொதியலு மாகுமே!"

என்று (1880) திருமூலர் கூறுகின்றார்.

*160 வீசை கொண்டது 1 பாரம். 24 பட்டணம்படி* கொண்டது ஒரு கலம். இவை பழைய அளவுகள்.

## 43. விதிக்கப்பட்ட பொருள்கள்

திருத்துதிரு மேனிதனை யெழினவவத் திரத்தா
லிணங்கிடமூ டிடும்போது சீடராதியரைப்
பொருத்தமுட னனுப்பியபின் பஞ்சகவ்வி யத்தாற்
புரோக்கித்துப் பக்கமெல்லாம் புகன்றிடுமோர் முழத்தைக்
கருத்துடனா ராய்ந்தெடுத்த தூயலவ ணந்தான்
கவின்கௌரி சனச்செந்தூள் சமமாகக் கலந்து
பெருத்தலவ ணந்தான்கொண் டழுந்திடப்பூ ரிக்கப்
பேசிடுவா மினும்வசன பேதம்விதித் தனவும்.

***உரை:*** மேலான ஞானியின் திருவுருவத்தை, அழகான **புதிய துணியினால் இணங்கிட மூடும்போது, அந்த ஞானியின் சீடர்கள் முதலானவர்கள் கடைசியாகத் தரிசித்த பின்னர், ஆனைந்தினால் தூய்மை செய்து, உடலைச்சுற்றிலும், ஒருமுழ அகலத்திற்கு, நல்ல நினைவோடு சேகரித்த (உப்பினுடன்) நல்ல வண்ணமுள்ள அழகான மஞ்சளின் சிவந்ததூள் சமமாகக் கலந்து, பெருமையான உப்புக்கொண்டு அழுந்தச் செய்து நிறைத்து, மேலும் இதற்காக விதிக்கப்பட்டனவற்றைப் பின்னர் பேசிடுவாம்.**

***விளக்கம்:*** **எழில் நவவத்திரத்தால் என்று மட்டும் கூறப்படுகிறது. மெய்ப்பை (குப்பாயம்) தைத்து அதில் வைத்தல் சாலச் சிறந்தது. ஞானியரின் முகத்தைக் கடைசி முறையாக, அவர்தம் சீடர் முதலானோர் காணல் நன்மை பயக்கும். உப்பிடுதல், உடல்கெடாதிருப்பதன் பொருட்டும்,**

தீயமணம் ஏற்படாதிருக்கும் பொருட்டுமாகும். செங்கற்பொடியும் திருநீறும் உடலிலுள்ள தேவையற்ற நீரை இழுத்து வடித்தல் பொருட்டாம். மஞ்சள் உடலின் தன்மையினைப் பாதுகாக்கும். மூன்றாம் வரியில் சனச்செந்தூள் என்பது சந்தனத்தூளோ என்பது ஐயம். மணப்பொருள்கள் பலவும் இடுதலை,

"நள்குகை நால்வட்டம் படுத்ததன் மேற்சாரக்
கள்ளவிழ் தரமங் களபங்கத் தூரியுந்
தெள்ளிய சாந்து புனுகுபன் னீர்சேர்த்
தெள்ளியநற் றூபம் உவந்திடு வீரே!" (1881)

என்பார் திருமூலர். மேலும் குப்பாயம் என்னும் மெய்ப்பையினுள் இடவேண்டும் என்பதனை,

"ஓதிடும்வெண் ணீற்றால் உத்தூளங் குப்பாய
மீதினி லிட்டா சனத்தினின் மேல்வைத்துப்
போதறு சுண்ணமும் நீறும் பொலிவித்து
மீதி லிறுத்தி விரித்திடுவீர் நீரே!" (1882)

என்று திருமூலர் கூறுகின்றார்.

## 44. வெண்ணீறு முதலானது இடுதல்

அன்றியற்று மருங்குகையி னடியினொரு முழந்தா
ன(ரி)ச(ன)த்தின் பொடியிடுமீ லவணமுமோர்
முழமா
மன்றியினு மெதிமுனியா மிருவோர்க்கு முழுது
மாமுப்பு மணற்கலந்த வணிநீறு மாகு
மன்றியினுங் கூவிளபத் திரமுற்று மாமிவ்
வனைத்தினையு மறைந்தமுறை யமைத்தற்கு
முன்னம்
மன்றவடங் கோமயத்தான் மெழுகிமணற் பரப்பி
யதிற்றருப்பை விரித்திடுத லாதியினிற் புரியே!

***உரை:*** அன்று தோண்டிய அக்குகையின் அடியில் ஒருமுழந்தான் மஞ்சள் பொடியிட்டு, அதன்மேல் ஒருமுழம் உப்பும், அல்லாமலும், எதிமுனிவர் இவர்கள் இருவருக்கும்

உப்பும் மணலுங்கலந்த திருநீறும் ஆகும். அல்லாமல், இன்னும் வில்வ இலைகள் முழுவதும் நிரப்புவர். இவைகளை நிரப்புமுன் முதன் முதலில் சமாதிக் குழியின் உள் இடத்தினைக் கோமயத்தால் மெழுகி, புதுமணல் பரப்பி, அதில் தருப்பைகளை விரித்து வைத்தல் வேண்டும்.

**விளக்கம்:** குழியின் உள்தரையினைக் கோமயத்தால் மெழுகி, புதிய ஆற்றுமணலைப் பரப்பி, அதின்மேல் தருப்பைகளை விரித்து, அதன்மேல்தான், பிறபொருள்களை இடுதல் வேண்டும். வில்வமும் இட வேண்டும். இதனை,

"மீது சொறிந்திடும் வெண்ணீறுஞ் சுண்ணமும்
போது பலகொண்டு தர்ப்பைப்புல் வில்வமும்
பாத உதகந்தான் மஞ்சனஞ் செய்துபார்
மீதுமூன் றுக்குமூன்று அணிநிலஞ் செய்யுமே!" *(1884)*

என்பார் திருமூலர். மேலும்,

மறையோரு மற்றை வரசாள ராதி மதியோர்கள் கோசரத்தா
யுறைவார்க்கு நல்ல விடமேவி யங்கெணானியார
மல்குழிசா
ணிறைவாக வாறினுடனாறு கல்வி நிகழ்கோசம்
வைத்ததின்மேல்
மறையோது மஞ்சளுடனுப்பு மண்கொ டிவையாக
மூடியிடவே!

என்று கனன விதி *(10)* கூறுகின்றது.

## 45. பீடஞ்சமைத்தல்

அந்தத்தி லோர்முழமு மானமிருத் துவினா
லமுழுந்திடவே பூரித்தங் கதன்மீதே மூன்று
சந்தித்த மேகலைக டயங்குமொரு பீடஞ்
சமசதுர மண்சிலையாற் சமைத்துநடு மீக்கண்
வந்தித்த மண்மயத்தாற் கணலிங்க பீடம்
வகுத்தவற்றொன் றன்றுமுதற் றசவார மனவுஞ்
சிந்தித்தே பூசைசெய்க திக்குபெலி யந்தஞ்
சீர்புதல்வன் சிடன(ன்ப)ன் நிகழ்கூடஞ் செய்தே.

**உரை:** இவை யாவும் இட்டு நிறைவு செய்தபின், முடிவில் ஒருமுழம் மண்கொண்டு அழுந்திட மூடி நிரப்பி, அதன்மேல் முக்கோண பீடம் செய்து, அதன் மூன்று முனைகளும் சந்திக்குமாறு வட்டபீடம் செய்து. அதன்மேல் சம சதுரமாக மண், கற்கள் கொண்டுசெய்து, அதன் நடுவின் மேலே, வணங்கத்தக்க மண்ணின் சாரத்தினாலே க்ஷணிகலிங்கம் எனப்படும் மானசீக இலிங்கபீடம் அமைத்தல் வேண்டும்.

அதனை அவரது மகனாதல், சீடனாதல், அவரிடத் தன்புடையோராதல், உள்ளன்போடு, மானசீகமாக திக்குபலி பூசைவரைக்கும் பத்து நாட்கள் (எழுபது நாட்கள்) பூசித்து வரவேண்டும்.

**விளக்கம்:** ஞானியைக் குகையில் வைத்து மூடியபின், மேலே பீடஞ்சமைத்தல் கூறுகின்றது. முக்கோணம், வட்டம், சதுரம் ஆகிய பீடங்கள் செய்து, அதில் மானசீகமாக இலிங்கம் அமைத்து, வழிபடல் வேண்டும். 40 அல்லது 45 அல்லது 48 நாட்கள் ஒருமண்டலம் என்பர். இங்கு வாரம் என்பது நாளைக் குறிக்குமாயின் 10 நாட்களாகும். ஏழுநாட்களைக் குறிக்குமாயின் 70 நாட்களாகும். இது ஆய்வுக்குறியது. 48 நாட்கள் மண்டல பூசை என்பது வழக்கு. கணலிங்கம் என்பது ஒரு (க்ஷண) கணநேரம் மட்டும் தங்கக்கூடியதாகும். நீராடியபின் தண்ணீரில் நின்று அத்தண்ணீரில் மண்டலமிட்டு, அதில் இலிங்க உருவினை எழுதி, அதனை வழிபடல் மானசீகமுமாம். இது 12-ம் பாட்டிலும் கூறப்படுகின்றது.

## 46. ஞானிகட்குப் பிண்டோதகக் கிரியை, தீட்டு முதலானவைகள் இல்லை

நல்லசி ஞானத்தால் யோகத்தான் மனுவா
 னற்றவத்தா லெதித்திறத்தாற் றீக்கைவிசேடத்தாற்
சொல்லரிய பத்திவயி ராக்கியத்தா லன்பாற்
 சுசாதியுத் தாரணம்வரத் துறந்தோர்வீ டடைந்தா

வில்லையாஞ் சாதிநானமு மேயில்லை யேற்ற
பிண்டோ தகக்கிரியை சிராத்தமுமங் கில்லை
யல்லறரு மழுகைமுத லானவெல்லா மில்லை
யக்கினியு மில்லையங்குட் டப்பிணிப்பு மில்லை!

***உரை:*** நல்ல சிவஞானத்தாலும், சிவயோகத்தாலும், சிவதரும நெறியாலும், மேலான தவத்தாலும், புலனடக்க முடைமையாலும், தீக்கைச் சிறப்பினாலும், அளவிறந்த பக்தி, வைராக்கியத்தாலும், எல்லையற்ற அன்பாலும் இல்லறத்தினை முற்றும் துறந்ததாலும், சிறந்து விளங்கி வீடுபேற்றினை அடைந்தால், அத்தகு ஞானியர்களின் இறுதிச் செயலில் கலந்துகொண்டவர்கட்குத் தீட்டு இல்லை யாகையால் நீராடவேண்டியதில்லை. அந்த ஞானிகட்குச் செய்யவேண்டிய பிண்டோதகக் கிரியைகள் இல்லை. திவசம் கொடுப்பது இல்லை. துன்பத்தைத் தருகின்ற அழுகை இல்லை. நெருப்புக்காரியங்கள் இல்லை. சிறிதுகூட நோயுமில்லை.

***விளக்கம்:*** ஞானியராவரின் குணங்கள் கூறப்பட்டன. ஞானியர் உயிர்நீத்த உடலைச் சிவமாகவே பாவித்தலால், தீட்டு முதலானதில்லை. மனிதர்கட்குரிய திவசம் முதலானவைகள் இல்லை. யாரும் அழமாட்டார்கள். அழவும் கூடாது. அங்குட்டம் கட்டைவிரல் எரித்தல் இல்லாததால் நெருப்பு இல்லை. மூதாதையர் (பிதிரர்)களுக்கு ஆண்டுதோறும் பிண்டம் பிடித்துப் போடுதல் என்ற வழக்கம் உண்டு. பிதிரர்கள் மீண்டும் பிறப்பதனால் அது செய்வர். ஞானிகள் மீண்டும் பிறவார். அதனால் அது கிடையாது. இதனை,

யாது செய்வதிக் கோசமென் றுரைசெயி லிலங்கிய மூவர்க்கு
மாதி சொல்லிய பரிசிலே யருச்சனை செய்தது கணித்தங்கோர்
போதிற் பீடமா லயமியன் றதுசெய்து பூசைசெய் தடிபோற்றி
யீது செய்வதல் லாதுபிண் டோதகக் கிரியைசெய்
திடவேண்டா!

என்று குறுந்திரட்டு (74) கூறுகின்றது.

## 47 விதிக்கப்பட்டவற்றில் ஏதேனுமொன்று தவறினால் வரும் கேடுகள்

அறியாமை யாலிவற்றொன் றாயினுஞ்செய் தானே
லறமா(யு)ள் ளீட்டுதன மானவெல்லா மழியும்
பிறியாது பிணிவ(ரு)த்து மன்ன(வ)ரா லுலகாற்
பெரும்பீடைப் படும்வறுமைப் பெறுவடவை புகுவான்
பொறியான தழிந்துடலம் போயினபின் நரகம்
புக்கிளைப்ப னாதலினா லரனடியார் பூசை
நெறியாலே மங்கலமாய்த் தசவாரந் திங்கள்
நிகழ்வருடந் தோறுமந்தத் தினந்தனிற்செய் நினைத்தே.

**உரை:** அறியாமையினால், இவைகளில் ஒன்றாயினும் தவறாகச் செய்தக்கால், தருமம், ஆயுள், சம்பாதித்த பொருள்கள் முதலானவெல்லாம் அழிந்துபடும். அகலாத நோய் வருத்தும். மன்னராலும், உலகத்தாலும் பெரும்பீடை வந்தடையும். வறுமை எய்தும். ஊழித்தீ நாட்டைச் சுட்டெரிக்கும். ஐம்பொறிகளது செயலழிந்து, உடலழிந்த பின் நிரயம் புகுந்து வருந்துவர்.

ஆதலால், சிவனடியார் பூசையினை முறையோடு மங்கலமாக, தொடர்ந்த பத்துநாட்களும், மாதாமாதமும், வருடா வருடமும் அந்தத்தினத்தில் நினைந்து செய்தல் வேண்டும்.

***விளக்கம்:*** சமாதிவைக்கும்போது பெரியோர்கள் சமாதிக்கிரியையினை முற்றுமுணர்ந்த ஞானியர் அருகிருந்து கூற, அதன்படிச் செய்தல்வேண்டும். முதல் தசவாரம் செய்தபின், திங்கள்தோறும் சிறப்புப்பூசை செய்தல் வேண்டும். ஆண்டுதோறும் மிகச்சிறப்புப் பூசை செய்தல் வேண்டும். மகேசுவர பூசையும் செய்தல் வேண்டும். அதாவது சிவனடியார்கட்கு அமுதூட்டல். இவற்றை உண்மையுடன் செய்தல்வேண்டும். ஏதேனும் ஒன்று தவறினால் கேடுவிளையும். இதனை,

குலங்கெழு பிண்ட முன்னாக் குலவிய கிரியை வேண்டா
மிலங்கிய ஞானி கட்கே யியைந்தபூ சையதே செய்க
நலங்கெழு மிடத்திற் பீடம் பதுமைநல் லரசு முன்னா
வலங்கிருத மெவையுஞ் செய்க வெனமறை யறைந்த தன்றே !

என்றும்,

ஆண்டுக டோறு மந்த நாளிலே யோகி சற்கங்
கீண்டிய பூசை செய்வ தென்றரு மறைக டாமும்
பூண்டவா கம்பு ராணம் புகல்வுறு மிருதி யுண்மை
காண்டமால் பிரமனீசன் கருதிய திதுவே கண்டாய் ! (13)

என்றும், கனனவிதி கூறம்.

## 48. மெஞ்ஞானிகள் சமாதி பற்றி ஆகமங்கள் கூறுவது

நாடுபுகழ் சிவபத்தர் தீக்கைவிசே டத்தோர்
நவிலு(யெ)தி மாமுனிவர் நலந்தருமாந் திரிக
ணீடுபுலப் பகைவென்ற யோகிசிவ ஞான
நிகழ்த்துபொருள் குருவருளால் நிச்சயித்த ஞானி
கூடுசமா தித்தலங்க ளொன்றினுக்கொன் றேற்றங்
கூறெவற்றுஞ் சிற்பரத்தாற் றற்பரத்தோ டொன்றி
வீடுபுகும் பரமசிவ மெஞ்ஞானி சமாதி
மேலான சமாதியென விளம்பிடுமா கமமே !

**உரை:** நாடு புகழும் சிவனடியார்கள், தீக்கை விசேடம் பெற்றோர் சொல்லத்தகும் துறவிகள், மாமுனிவர்கள், நன்மை பயக்கும் மாந்திரீகர்கள், பெரிய பகையைத் தருகின்ற புலன்களை வென்று அடக்கிய சிவயோகிகள். சிவஞானம் கூறுகின்ற பொருள்களைக் குருவருளால் நிச்சயம் செய்துகொண்ட ஞானிகள் முதலானோர்களை வைத்த சமாதியிடங்கள், ஒன்றுக்கொன்று மேலானதென்று கூறும்.

சிவனாலே, சிவனோடொன்றி, வீடு புகுகின்ற பரமசிவ மெஞ்ஞானி சமாதியே மேலான இருப்பிடமென்று ஆகமம் கூறும்.

***விளக்கம்:*** சமாதித் தலத்தில் ஏற்றத்தாழ்வில்லை. எல்லாத்தலங்களுமே, மேலானதென்று ஆகமங்கள் கூறுகின்றன. இதனை, மேற்குறித்த கனனவிதி 13-ம் பாடல் சிறப்பிக்கின்றது. மேலும் வேதம் கூறுவதாக,

> சாற்றிய பிரமகோசந் தரித்துடன் சென்றோர் தங்கட்
> கேற்றிய வடிக்கோ ரசுவ மேதமென் றியம்பும் வேதம்
> போற்றியே செய்வித் தோர்க்குப் புகலுமோ ரசுவ மேத
> மாற்றவங் கப்போ துற்ற பிரமபா தகனுஞ் சுத்தன். *(11)*

என்று கனனவிதி கூறுகின்றது.

### 49. சமாதி மீது வைத்தற்குரியன

> திங்கள்முடி யோன்விதித்த காலம்வரு மளவுஞ்
> சிவஞானி தனைச்சிவமாய்ச் சிந்தித்து விதியா
> லங்கருக்க பூசாதி கபிலாந்த முப்போ
> தாதலிரு காலொருகா (லா)தலருச் சித்தோன்
> றங்குசிவ லிங்காதி தாபனஞ்செய் விப்பான்
> சத்தனே(வில்) வம்(மர)சு தாபித்துப் பூசை
> யிங்கவனைப் போற்புரிவான் பின்வலனே லதன்முன்
> னிருத்திடலு மாமிலிங்கங் குரவர்திற முரைப்பாம்.

***உரை:*** திங்கள் முடியோனாகிய சிவபெருமான் விதித்த காலம் வருமளவும். சிவஞானிதனைச் சிவமாகச் சிந்தித்து, முறைப்படி அங்கு, அருக்கிய பூசை, முதலாக, கோபூசை ஈறாக, மூன்றுவேளையாவது, இரண்டு வேளையாவது, ஒருவேளையாவது பூசை செய்தவர்கள் சித்தர்கள். சமாதித்தலத்தில் சிவலிங்கம் முதலானவைகளை அமைத்துப் பூசிப்பவன் சுத்தனாவான். அத்தலத்தின்மீது அரசு அல்லது வில்வமரம் வைத்து, அதன்முன் சிவலிங்கம் அமைத்துப் பூசையினைச் சிவஞானியைப் போலவே செய்பவன் பிறகு போற்றப்படுவான். இனி ஆசிரியனதிலக்கணம் கூறுவாம்.

***விளக்கம்:*** சமாதியைப் பூசிப்பவர் பேறடைவர். அச்சமாதி மீது, இலிங்கத்தினை அமைப்பவர்களும்,

அத்தலத்தில் அரசமரம், வில்வமரம் இவைகளை அமைப்பவர்களும் நற்பயனை அடைவர். அர்க்கியம்: இறைவனுக்கு உணவு வைத்து, உண்ணச்சொல்லி நீராட்டுதல். இது, பூசனை முறையுளொன்று. 16 உபசாரங்களுளொன்று. சிவபூசை முடித்த பின்னர். பசுவைப் பூசித்தால் சொல்லொண்ணாத புண்ணியம் கிட்டும்.

திருவானைக்காவில், அகிலாண்ட நாயகியாம் அன்னை, சம்புகேசுச்சுரரை நாளும் வழிபட்ட பின்னர், கோபூசை செய்வார். உச்சிக்காலத்தில் இன்றும், கோயில் அர்ச்சகர் பெண்வடிவம் தாங்கி, அம்மன் கருவறையினின்றும் புறப்பட்டு, சுவாமிகோயிலை அடைந்து, பூசித்த பின்னர், வெளியில் கோபூசை செய்வதைக் காணலாம். இது சிவபூசை முறை. இப்பூசையின் சிறப்பினைக் கனனவிதி முன்கூறிய 13-ம்பாடல் சிறப்பிக்கிறது. மேலும்,

ஆதன மீதி லரகசிவ லிங்கம்
போது மிரண்டினில் ஒன்றைத்தா பித்து
மேதகு சந்நிதி மேவுத் தரம்பூர்வங்
காதலிற் சோடசங் காணுப சாரமே !

*(1885)* என்பார் திருமூலர்.

## 50. ஆசி(ரி)யரிலக்கணம்

அரி(ய)சிவ ஞானிசமா தித்தலந்தான் காசி
யானதல மென்றுமந்தச் சமாதிலிங் கத்தான்
கரியமுகில் தொழும்விசுவ நாதலிங்க மென்றுங்
கருதுசுயம் புத்தானந் தெரிசனனான் முத்திப்
பெரியலிங்க மென்றுமா மற்றையவென் றெண்ணும்
பேதையர்க ளொருகோடி பிரமகற்ப மளவும்
விரியழல்வெந் நரகடைவ ரென்றுசிவா கமங்கள்
விளம்பியிடு மீதறியார் வீணறைவ ரந்தோ !

**உரை:** பெரிய சிவஞானியை அடக்கம்செய்த சமாதித் தலந்தான் காசித்தலமென்றும், அச்சமாதித் தலத்தின்மேல்

வைக்கப்பட்ட இலிங்கந்தான், பெரிய மேகங்கள் வந்து வணங்குகின்ற விசுவநாதர் எனப்படும் விசுவலிங்கமா மென்றும், கருதுவார்கள். சுயம்பு இலிங்கம் அமைந்துள்ள இடத்தில் தரிசிப்பதும், பெரிய இலிங்கங்களைத் தரிசிப்பதும், மட்டுமே முத்திதரவல்லன என்று எண்ணும் அறிவிலிகள், ஒருகோடி பிரமகற்பமளவும், கொடுந்தீ நிறைந்த நரகிடையுழல்வர் என்று சிவாகமங்கள் கூறுகின்றன. இதனையறியாதவர்கள் வீணாகக் கூறுவர்.

விளக்கம்: க்ஷேத்திரம் எனப்படும் சிறந்த தலங்களில் சுயம்பு மூர்த்தியாக விளங்குகின்ற சிவனைவிட, சமாதிமேல் வைக்கப்பட்ட இலிங்கத்தினை வணங்குபவர்கட்குப் பலன் அதிகம் என்று கூறுகின்றார். நடுப்பகுதி தெளிவிலது. பிரமகற்பம்: ஆயிரம் கோடாகோடி வருடம் பிரமனுடைய வாழ்நாள்.

*இதற்குமேல் தொடர்ச்சி இல்லை.*

**தென்னா டுடைய சிவனே போற்றி!**
**எந்நாட் டவர்க்கும் இறைவா போற்றி!!**

பிற்சேர்க்கை

# பரமானந்தயோகி சரித்திரம்

## (பூரணப்பிரம்மானந்தயோகி கூற்று)

பரப்பிரம்மானந்த யோகீசுவரருடைய சீடர், பூரணப் பிரம்மானந்தயோகி. குருவும், சீடரும் வல்லத்துக் கோட்டையிலே, வாசம் செய்துகொண்டிருந்தார்கள். சகஜிராசீபரர், சரீர வாசம் விட்டு, தவலோகஞ்சென்ற முன்பாகப் பரப்பிரம்மானந்த யோகீசுபரரும், பூரணப் பிரமாணந்த யோகியும் வல்லத்திலேயிருந்து, தஞ்சாவூருக்கு வந்து, சீத்தாப்பாராவ் அவல்தாரைக் கண்டு, அவருடனே குரு சுவாமியவர்கள் சொன்ன செய்தி:

சகசிராசீபரர் சரீரவாசம்விட்டுத் தவலோகம் போனார். அவர், நமக்கு ஆன்மபந்து. அவர் வாசம் பண்ணின கோயில், மந்திரபிண்டமான படியினாலே, அவர் கோயிலான மந்திரபிண்டத்தை, சமாதியிலே வையுங்கள். தகனம் பண்ணவேண்டாம் என்று திருவுளம்பற்றினார்கள்.

அப்படியே துரைக்குச் சொல்லி, மறுசேதி வந்து சொல்லுகிறோம் என்று, அவல்தார் (சென்று மீண்டுவந்து) உத்தரம் சொன்னார். அப்படியே துரைக்குச் சொன்னோம்; துரையவர்கள் மறுசேதி சொன்னார்கள். சந்து ராத்திரியிலே, பூருவ பட்சத்திலே, உங்கள் தரிசனம் பண்ணிக்கொண்டு, பேசவேண்டிய பேச்சு பேசிக்கொள்ளுவோமென்று சொன்னார்கள் என்று, அவல்தார் வந்து சொன்னார், எப்படியும், சரீரமான மந்திரபிண்டத்தினைத் தகனம் பண்ணாமல், சமாதியிலே எழுந்தருளப் பண்ணுங்கள் என்று குருசுவாமியவர்கள் திருவுளம்பற்றி, வல்லத்துக்கு எழுந்தருளினார்கள்.

இதிலே சதாசிவமான சகஜிராசீபரர், சரீரம்விட்டுத் தவலோகம் போனார்கள். மந்திரபிண்டம் தகனமாய்ப் போயிற்று. ஆனபடியினாலே திரும்பவும் குருசுவாமியவர்கள், தஞ்சாவூருக்கு எழுந்தருளிவந்து, அவல்தாரைக் கண்டு பேசினது. சொன்னபடி செய்யாமல், இப்படிச் செய்வார்களா? மகாதோஷம் வந்ததே. இப்படிச் செய்யலாமா? என்று கோபித்துக்கொண்டார்கள்.

அதற்கு அவல்தார் சுவாமி! இராசவம்சம் அல்லவா! பரம்பரையாய் நடக்கிற சம்பிரதாயம் எப்படியோ: அப்படியே நடக்கவேணும் இப்போது நூதனமாய் ஒன்று செய்தால், பூர்வீகம் தவறிப்போகும். உலகத்துக்கு நன்றாக இராது. புதைத்துவிட்டார்கள் என்று சொல்லுவார்களே! உங்களுடனே துரையவர்கள், பேசிக்கொள்ளுகிறோம் என்று சொன்னார்கள். மறுபடி உங்கள் தரிசனமும் ஆகவில்லை. துரையவர்கள் உத்தாரமும் இல்லையே. ஆனபடியினாலே சம்பிரதாயம் எப்படியோ, அப்படியே கருமம் முடித்தார்கள் என்றார்.

சம்பிரதாயம் பார்த்தீர்களே தவிர, மகிமை அறியாது போனீர்கள். இப்படி வரலாமோ என்று மிகவும் கலக்கப்பட்டு, இராசாவுக்கும், தேசாதிபதிக்கும், மண்டலாதிபதிக்கும் ஆகிய இவர்களிடத்திலே, சிவம் மாத்திரைப் போது இருக்கும். சகஜிராசீசுபரர், சதாசிவப் பிரம்மம். அவர் வாசம் பண்ணின கோயில், மந்திரபிண்டமான திருக்கோயில். அது தகனமான தோஷம், பதினாறு வருடம் வருத்துமே!. இராசாவுக்கு ஆகாதே. இராச்சியத்துக்கு ஆகாதே. மழை வெள்ளத்துக்கு ஆகாதே. பயிர்பச்சைகளுக்கு ஆகாதே. சகலமான சீவசந்துக்களுக்கும் ஆகாதே. உள்மூலம், பிறமூலம் கூடிவிட்டதே. இது இராச்சியத்தை தகித்துவிடுமே. நாலு முகத்திலேயும், இராச்சிய காரியம் நடக்குமே. வெகுசனங்களுக்கும், வெகு ராச்சியங்களுக்கும் உபாதியாய் வந்ததே. விலை குறைந்து போகுமே. தானியம் கொள்ளக்கிடையாதே. வானஞ் சுருங்கத் தானஞ்சுருங்கி, உலகம் பேயாய்ப் போகுமே. இப்படி வரலாமா? என்று குருசாமியவர்கள் அவல்தாரைக் கடிந்துகொண்டார்கள்.

தெய்வீகம் இப்படி இருந்தது. விதி, பலவந்தமாக வந்து விளையாடியது. நம்மை மிஞ்சின காரியத்துக்கு, சுவாமியவர்கள் தயவுபண்ணி ரட்சிக்க வேண்டும். இதற்கு உபசாந்தம் எப்படிச் செய்யவேண்டுமோ, அப்படிச்செய்து, தயவு செய்து இரட்சிக்கவேண்டும், என்று சீத்தாப்பாராவ் அவல்தார் மிகவும் உபசாரம் எல்லாம் செய்து, விண்ணப்பம் செய்தார்.

அப்பொழுது குருசாமியவர்கள், இரக்கப்பட்டு, நல்லது! நாம் சீரங்கவாசம் போகிறோம். நம்முடைய சீடன் பூரணப்பிரம்மானந்த யோகியை, இங்கேயே வைத்துவிட்டுப் போகிறோம். அவரை, உம்முடைய பக்கத்தில் வைத்துக்கொண்டு, (தியான சமாதி ஒன்று சமைத்து, அந்த) தியான சமாதிக்கு விக்கினம் வாராமல் நடத்திக்கொண்டு வாரும். பரிகாரம் ஆகும். பதினாறு வருடமும், இப்படியே பட்டணத்தில் இருந்து, உபசாந்தியாய் தியானசமாதி செய்துகொண்டு இருக்கச்சொல்லி, (சீடனாகிய)அடியேனுக்கு உத்தாரம் செய்து, அவல்தார்வசம் விடுத்தார்கள்.

அப்பொழுது, சீத்தாப்பாராவ் அவல்தார், மிகவும் மகிழ்ச்சியடைந்து, குருசாமியவர்களுக்கு,சீரங்கவாசத்துக்கு ஏற்றவாறு அனுப்பிவைத்துவிட்டு, அடியேனைத்(சீடனைத்) தஞ்சாவூரிலே வைத்துக்கொண்டார்.

அன்றுமுதல், அடியேன் தஞ்சாவூரிலே வாசம்பண்ணி, தியான சமாதிசெய்து, குருத்தியானம் செய்துகொண்டு இருக்கும்போது,சீத்தாப்பாராவ் அவல்தாரும் சிவனோடு ஐக்கியமாகிவிட்டார்.

அவரது மகன், வைத்தியோசி அவல்தார், தொடர்ந்து இதனைப் பராமரித்துக்கொண்டுவந்தார். இந்தப்படிக்கு வைத்தியோசி அவல்தார் பாரிசமாக, அவர் வீட்டிலே தானே, குருவாக்கியத்தின்படியே, உள்மூலம், பிறமூலம், கூடினதோஷம், உபசாந்தமாக வேண்டும். இராசாவினுடைய இராச்சியம், மிகவும் சுகமாய் இருக்கவேண்டும். மழை,

வெள்ளம் காலாகாலத்தில் உண்டாகத் தயவுசெய்யவேண்டும். உலகத்திலுள்ள மக்களைக் காக்கவேண்டும்; இராசீகம், தெய்வீகம்கூடி, உக்கிரம் பண்ணாமல், உபசாந்தமாய் நடத்திக்கொள்ளவேண்டும்; தருமம் தழைக்கவேண்டும். சத்தியமே செயமாகவேண்டும்; சரபோசி ராசீசுபரரும், துக்கோசி ராசீசுபரரும் சுகமாக இருந்து, மனது சந்தோஷமாக இராச்சியம் செய்யவேண்டும் என்று தியானம் செய்து கொண்டு, தஞ்சாவூர் பட்டணத்திலே இருந்து, கடலை சாந்திசெய்துகொண்டு இருக்குங்காலத்தில் தியான சமாதிக்கு விக்கினம் வந்து, சமாதி நின்றுபோய், அடியேனையும் பட்டணம்விட்டு வெளியே கொண்டுபோய் பத்திரம் செய்துவிட்டார்கள்.

வைத்தியப்பா அவர்களுக்குத் தெரியப்படுத்தி, அவர் இவ்விக்கினத்தைத் தீர்த்து, அடியேனைத் தஞ்சாவூருக்கு அழைக்க, வெகுநாட்களாகிவிட்டன. இதனால், மகாதோஷம் மேலிட்டு, துக்கோஜி ராசீசுபரர், மகாதேவப்பட்டணம் நிர்ணயம்பண்ணி இப்பதிவிட்டு, மகாதேவப்பட்டணத்துக்கு எழுந்தருளினார்கள். வைத்தியப்பா, அடியேனை அழைத்ததின் பேரில், அடியேன் தஞ்சாவூருக்கு வந்து வைத்தியோசி அவல்தாரைக்கண்டு, தியான சமாதிக்கு விக்கினம் வந்ததே. துரையவர்கள் பதி விட்டு வெளியே, மகாதேவப்பட்டணத்துக்குப் போயிருக்கிறார்களே ! மேற் கொண்டு என்ன நடக்குமோ தெய்வீகம் என்று கவலைப்பட்டு, மல்லாரிஜியப்பன் மகாதேவப்பட்டணத்துக்கு வருகிறபோது, அடியேனுங் கூடவந்து, தனியாக இருவரும் ஏகமாய், ஒரேயிடத்திலிருந்து, குருத்தியானம் செய்துகொண்டு இருக்கையில், சரபோசி ராசீசுபரர் சரீர சவுக்கியமில்லாமல் இருந்தார்கள்.

ஆனபடியினாலே, அடியேன் தஞ்சாவூருக்குப் போய், இருந்து, சரபோசிரர்சீசுபரர் சுகமாய் இருந்து, இராச்சியபாரம் பண்ணவேணுமென்று தியானம் செய்துகொண்டு[1] இருந்தேன்.

---

1. இருந்தது என்றுளது.

இதிலே பவரினுசங்கரத்தேவன்,[1] ஆபத்சகாயா என்று வந்தடைந்தான். அடைந்தாரைக்காக்க வேணுமென்று துக்கோசிராசிசுபரர், பாளையம் புறப்பட்டார்கள். மகாராசகாரியம் வந்து சேர்ந்தது. இது காரியம் சுருக்கிலே[2] பவானுசங்கரத்தேவனுக்குப் பட்டங்கட்டி, துக்கோசீராசீபரர், சுகமாய்ப் பட்டணம் வந்துசேரவேணுமென்று தியான சமாதி பண்ணிக்கொண்டு இருக்கையிலே, கங்கையான காவேரியம்மன், தயவு தப்பி, உத்தர காவேரிக் கொள்ளிடத்திலே, பார்வையானபடியினாலே, அடியேன் உபயகாவேரி மத்தியிலே, கோயிலடியிலே போயிருந்து, காவேரியம்மாளைப் பிரார்த்தித்துத் தியானம் பண்ணிக் கொண்டிருக்கையில், அணை அடைக்கவேண்டாம் என்று மதுரையார் தடைசெய்தார்கள்.

அதனால் திருச்சிராப்பள்ளிக்குப் போய்ச் சமூக மீனாட்சி நாயக்கரைக்கண்டு, விசயரெங்கச் சொக்கநாத நாயக்கருக்குப் பயபக்தி வரத்தக்கதாய்த் தாகீதை செய்து, அணை அடைத்துக் காவேரியம்மன் சோழதேசப் பிரவேசமாக வேண்டும் என்று தியானம் பண்ணிக்கொண்டு இருந்து, அணை அடைபட்ட பிறகு, தஞ்சாவூருக்குவரப் பயணமாய்த் திருக்காட்டுப் பள்ளிக்கு வந்தேன்.

இதிலே, இரண்டாவது அணை உடைத்துக்கொண்டு போகுதென்று, ஆடம் வெங்கிடாத்திரிய நாயக்கன் தம்பி, கோனேட்டி நாயக்கன் வந்து சொன்னான், ஆனபடியினாலே அணைக்கு ஈசானியமான ஆலந்துறையிலே போயிருந்து தியானம் செய்துகொண்டு, காவேரியம்மாளைப் பிரார்த்தனை செய்துகொண்டிருந்தேன்.

அணை பத்திரமான பிறகு, தஞ்சாவூருக்கு வந்து வைத்தியப்பாவைக்கண்டு, பதினாறாம் வருடமாகிறது. தோஷம் கழிவானபடியினாலே. இதுக்கு உபசாந்தி தூலமாய்ச் செய்யவேண்டும். இது காரியம் அரண்மனையிலே சொல்லிச் செய்யும் என்று யாதி எழுதிக்கொடுத்து, செய்தியும் சொல்லி

*1. பவானிசங்கரத்தேவன் எனல் பொருந்தும். 2. சீக்கிரம்*

நடத்தினவிடத்திலே, யாதி, அரண்மனையிலே செல்லாதே போயிற்று. தனி இருவரும், பட்டணம்விட்டு மகாதேவப்பட்டணத்திற்கு எழுந்தருளினார்கள்.

இப்படி, இருவரும் பட்டணம்விட்டு, வெளியிலே புறப்படலாமா என்று வைத்தியப்பாவுடனே சொல்லிக் கொண்டு, மகாதேவ பட்டணத்துக்கு வந்து, தனியிருவரும் சுகமாய்த் தஞ்சாவூர்ப் பட்டணத்துக்கு வந்துசேர்ந்து, ராச்சியம் செய்யவேணும் என்று, தியானம் செய்துகொண்டு இருக்கையில், மழை, வெள்ளம் பக்குவத்துக்கு வராமல், தப்புவித்துக்கொண்டு உலகமெல்லாம் தகித்துக்கொண்டு வருகிறது. ஆனபடியினாலே மிஞ்சின காரியமாய் இருக்கிறது. இப்படிச் செய்வார்களா? உக்கிரம், சாந்தம் பெறவேண்டும். மண்டலத்தில் வருச வருசமாய் வருசிக்கவேண்டும். மழையும், வெள்ளமும்கூட வரவேண்டும் என்று தியானம் செய்துகொண்டு, உள்மூலம், பிறமூலத்துக்குப் பூரணாகுதி கொடுக்கவேண்டும் என்று அரண்மனைக்கு யாதி எழுதி, சுப்பராவ் பாரிசமாய்க் கொடுத்தேன். அரண்மனைக்கு ஏறவில்லை. இரண்டாவது, மாதவராவ் பாரிசமாய் எழுதி அனுப்பினேன். அதுவும் நடவாமல் போய்விட்டது.

மூன்றாவது வீரோசி மூலமாக யாதி எழுதி அனுப்பியும் நடக்கவில்லை. நாலாவது மக்கரசி நாயக்கர் பாரிசமாய் எழுதிக்கொடுத்தேன். அந்த யாதியும் நடக்கவில்லை. தீவட்டி லிங்கோசி நாயக்கன் மூலமாக ஒன்று அனுப்பினேன். அந்த யாதியும் அரண்மனையாருக்குத் தெரியவில்லை. அடியேனுக்கும் குரு உத்தாரம் பதினாறு வருடத்துக்குமேல் நான்குமாதம் நிறைந்து, ஐந்தாம் மாதமும் நடக்கிறது.

ஆனதால், அடியேன் தானே, வெளியே புறப்பட்டு யாதியும் கொடுத்து அனுப்பி அரண்மனையிலே உத்தாரம் வாங்கிக்கொண்டு, தபசுலே இருக்கவேணுமென்று வந்தேன்.

சுவாமியவர்கள் தயவுசெய்து, உத்தாரங்கொடுத்துச் சந்தோஷகரமாய் நடப்பிச்சுக்கொள்ளக் கட்டளையிடவும்.

# எமது வெளியீடுகள்

| | |
|---|---|
| ஜாதக அலங்காரம் | 125-00 |
| காலபிரகாசிகா | 100-00 |
| நக்ஷத்திர சிந்தாமணி (பாகம்-I) | 200-00 |
| நக்ஷத்திர சிந்தாமணி (பாகம்-II) | 100-00 |
| அமரகோசம் (பாகம்-I) | 65-00 |
| அமரகோசம் (பாகம்-II) | 60-00 |
| அமரகோசம் (பாகம்-III) | 60-00 |
| பிரகதீஸ்வர மாகாத்மியம் | 43-00 |
| ஜைனிஸம் கேட்லாக் | 10-00 |
| தக்ஷிணாமூர்த்தி ஸம்ஹிதை | 35-00 |
| காயத்ரீ கோசம் | 30-00 |
| கீதகோவிந்தம் | 25-00 |
| கல்பலதா (ஸ்ரீருத்ரபாஷ்யம்) | 22-00 |
| பாணினீய தாதுபாடம் | 30-00 |
| விருத்தரத்னாவளி | 30-00 |
| பலவதி | 120-00 |
| நந்திநாகரி சுவடிகளின் அட்டவணை | 25-00 |
| பிரபஞ்சசாரசார ஸங்கிரஹம் (பாகம்-I) | 180-00 |
| பிரயோக ரத்னமாலா | 55-00 |
| ரத்ன பரீக்ஷை | 40-00 |
| சப்தம் தாளம் சொற்கட்டு | 40-00 |
| ஸாம்ராஜ்ய லக்ஷ்மீ தீபிகா | 100-00 |
| ஸ்தோத்ர ராமாயணம் | 25-00 |
| நாககுமார காவியம் | 55-00 |
| விமானார்ச்சன கல்பம் (பாகம்-II) | 75-00 |
| சூலினிகல்பம் | 50-00 |
| சூர்யசதகம் | 50-00 |
| தஞ்சை நாயக்கர் வரலாறு | 205-00 |
| யதிராஜவிஜயம் | 35-00 |
| பிரபோதசந்திரிகை | 70-00 |

# வேண்டுகோள்

கருணையுள்ளங்கொண்ட நம் முன்னோர்கள் அரிய பெரிய இலக்கியங்களையும், பிறவற்றையும் பனை ஓலைகளில் எழுதிச் சுவடிகளாக நமக்குத் தந்தனர். அவை பல்வேறு இடங்களில் முடங்கி உள்ளன. சுவடிகள் பழுதடைவதற்குமுன் சரசுவதி மகாலுக்கு அன்பளிப்பாகக் கொடுத்துதவினால், அவை மக்களுக்குப் பயன்படும்.

மகாலுக்குக் கொடுப்பதன் மூலம், சுவடி தந்தவர்களும், சுவடி எழுதியோரும் அழியாப்புகழை, பெருமைசால் சரசுவதி மகால் உள்ளளவும் பெறுவர். அவை பதிப்பாகி வருமாயின் சுவடி தந்தார் பெயர் இடம்பெறுவதோடு, அப்பதிப்பில் ஐந்து பிரதிகளும் பெறுவர்.

எனவே, நாம் பெற்ற பேறு பெறுக இவ்வையகம் என்ற எண்ணமுடைய நற்பண்பாளர்கள் தம்மிடமுள்ள சுவடிகளைச் சரசுவதி மகாலுக்குத் தந்துதவ வேண்டுகிறேன்.

தஞ்சாவூர்

**மாவட்ட ஆட்சித்தலைவர்**
**மற்றும் இயக்குநர்**
சரசுவதி மகால் நூலகம்.